# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைடமின்களும், தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை.

*அவை போதுமான அளவில் கிடைக்கின்றனவா?*



வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றுக்குறை உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்தைப் பாதிக்கக்கூடும். சோர்வு, ஜலதோஷம், பசியின்மை, உடல் இளைத்துப்போதல், சரும உபாதைகள், மற்றும் பல் உபாதைகள் - இவற்றிற்கு மூலகாரணம் சாதாரணமாக, இன்றியமையாத வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றுக்குறைதான். இருப்பினும், வைடமின்களும், தாதுப் பொருள்களும் பெரும்பாலும் அலட்சியம் செய்யப்படுகின்றன. மிகவும் கவனமாகத் திட்டமிடப்பட்ட உணவில் கூட இவற்றின் பற்றுக்குறை காணப்படுகிறது. வளமான உணவு எல்லாம் சரிவிகித உணவாக இருப்பதில்லை; விதவிதமான உணவுகளிலும், வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றுக்குறை இருக்கக் கூடும். அப்படியானால், அத்தியாவசியமான வைடமின்களும், தாதுப் பொருள்களும் - அதுவும் சரியான விகிதங்களில் - உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கின்றன என்று நிச்சயமாக எப்படிச் சொல்ல முடியும்?

உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும், தேவையான அளவுகளில் இந்த இன்றியமையாத போஷாக்குச் சத்துக்கள் கிடைப்பதை உறுதிப் படுத்திக் கொள்ள, அவர்களுக்கு விம்க்ரான் - ஸ்க்விப் பல்வேறு வைட்டமின், தாதுச் சத்து மாத்திரைகள் - கொடுங்கள், தினம் ஒரு மாத்திரை வீதம். இந்த ஆரோக்கியமான வழக்கத்தை இன்றே ஏன் ஆரம்பிக்கக்கூடாது?

விம்க்ரானில் 11 முக்கியமான வைடமின்களும், 8 தாதுப் பொருள்களும் சரியான அளவுகளில் அடங்கியிருக்கின்றன. இரத்தச் சிவப்பு உயிரணுக்களை வளர்க்கவும், சக்தியை மீண்டும் பெற உதவவும் இரும்புச் சத்து - எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வைத்திருக்க கால்ஷியம் - ஜலதோஷத்தை எதிர்க்கும் சக்தியை அதிகரிக்க வைடமின் ஸி - சிறந்த கண் பார்வைக்கும், ஆரோக்கியமான சருமத்திற்கும் வைடமின் ஏ - பசியைத் தூண்டி, தாங்கும் சக்தியை அதிகரிக்கும் வைடமின் பி-12 - இவற்றுடன், உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்குத் தேவையான, இதர போஷாக்குச் சத்துக்களும் அடங்கியிருக்கின்றன.

# விம்க்ரான்®

பல்வேறு வைட்டமின்-தாதுச் சத்து மாத்திரைகள்

## 11 வைட்டமின்களும் 8 தாதுப் பொருள்களும் அடங்கியது.

**ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது.**

SQUIBB® SARABHAI CHEMICALS

Shilpi HPMA-25A/71 Tam

# எங்கும் எப்போதும்....
# ஹாமர் மாஸ்டர்.





பிக்னிக்குகளுக்கு உடன் கொண்டு செல்லுங்கள்




அலுவலகத்திற்கு எடுத்துச் செல்லுங்கள்






கதகதப்பாக இயங்க சூடான தேநீர் உங்களுக்குத் தேவையா? அல்லது இதம் தரும் குளிர்ந்த காப்பி வேண்டுமா? உங்களுடைய ஹாமர் மாஸ்டரை உபயோகியுங்கள். உஷ்ணத்தை நன்கு இருத்தி வைத்துக் கொள்ளும் வகையில் ஒவ்வொரு ஹாமர் மாஸ்டர் ரீபில்லும் 'டெம்பரேச்சர் டெஸ்ட்' செய்யப்படுகிறது.

பல அழகான டிசைன்களில் உள்ள ஹாமர் மாஸ்டர் மாடல்களிலிருந்து உங்களுக்குப் பிடித்ததை தேர்ந்து எடுங்கள்....250 மி.லி.யிலிருந்து 2750 மி.லி. வரையான அளவுகளில் கிடைக்கும். உறுதியான, திடமான உங்கள் ஹாமர் மாஸ்டர் பல ஆண்டுகளுக்கு உழைக்கும்.

நினைவிருக்கட்டும், ஹாமர் மாஸ்டர் நல்ல பரிசுப் பொருளும் ஆகும்.... ஊழியர்களுக்கும், கஸ்டமர்களுக்கும், நண்பர்களுக்கும் அதை பரிசாக வழங்கலாம்.

நல்ல ஃப்ளாஸ்க் வேண்டுமெனக் கேளுங்கள். கிடைக்கும்




# ஹேமர்மாஸ்டர்

HVG-21/73 TM

# கல்கி பொருளடக்கம்

பிரமாதீச, பங்குனி 4. ■ மார்ச் 17, 1974




டி. டி. கே. மறைவு — 5
தமிழ் நாட்டிலே... — 8
அம்பாளின் ஸ்வரூபம்—2 — 11
எண்ணங்கள் கனவாகும்போது... — 12
சிவகாமியின் சபதம் — 19
தாய் — 29
கண்ணில் தெரியுது ஒரு தோற்றம் — 30
விண்ணும் மண்ணும் — 35
நடை சாய நேர்ந்தாலும் நாடு நிமிர உழைத்தவர் — 43
ஆசைகள் மடிவதில்லை — 44
பொறுப்புமிக்க சரக்கு மாஸ்டர் — 46
பள்ளிப் படிப்பும் பரவசமாகலாம் — 51
சன்னிதானம் ; எடுப்பார் கைப்பிள்ளை — 53
திரவியம் தந்த திரவியம் — 55
அதென்ன பாசம் ! — 60


மேலட்டை;

உயர் தென்னையை விட மங்கை உயர்ந்த இலே?
உயர் மனத்தை உணர்த்தும் புகைப்படக் கலே!

வண்ணப்படம் : உத்தரா

"கல்கி"யில் வெளி வரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்ப வங்களும் கற்பனையே


| கல்கி சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்



மலர் 33 -- இதழ் 33

# டி. டி. கே. மறைவு

பிரதமர் முதல் பாமரர் வரை எல்லோராலும் டி.டி.கே. என்றே அன்புடன் அழைக்கப்படும் அளவுக்கு நேச உள்ளம் பெற்றிருந்த ஒருவர் நம்மிடமிருந்து மறைந்துவிட்டார். குறைவற்ற மதிப்பையும் புகழையும் பெருமையையும் தமது அறிவாலும், ஆற்றலாலும் தேடிக் கொண்டவர் முன்னாள் நிதி அமைச்சர் திரு டி.டி. கிருஷ்ணமாச்சாரியார்.

ஆரம்ப காலத்தில் தொழில் வர்த்தகத் துறையில் அவரே ஈடுபட்டிருந்தமையால் தொழில் வளர்ச்சியையும், பொருளாதாரத்தையும் பிரதானமாகக் கொண்டே டி. டி. கே.யின் அரசியல் ஆற்றல் பிரகாசித்தது. தமது சோஷலிசக் கருத்துக்களை ஜனநாயக முறையில் .செயல்படுத்த முழுத் தகுதி வாய்ந்தவர் என்று கருதி, ஜவாஹர்லால் நேரு, டி. டி. கே.யைத் தமது அமைச்சராக்கிக் கொண்டார். அவர் வைத்த நம்பிக்கைக்குக் குறைவு ஏற்படாவண்ணம், தமது பதவிக் காலத்தில் டி. டி. கே. செயலாற்றினார். நேருஜியின் சோஷலிச கருத்துக்களுக்கு இசைவாக இயங்கிய போதிலும் டி.டி.கே., தனியார் துறையில் அளவற்ற நம்பிக்கை வைத்திருந்தார். நாட்டின் துரித வளர்ச்சிக்கு அந்தத் துறைதான் உதவ முடியும் என்று உறுதியுடன் இருந்தார்.

டி.டி.கே. அவர்கள் மத்திய அமைச்சராக இருந்த காலத்தில்தான் தமிழகத்தில் மட்டுமின்றி நாடெங்கிலும் புதிய புதிய தொழிற்கூடங்கள் பல்கிப் பெருகின என்பது குறிப்பிடத் தக்கது.

செயலில் துடிப்பும், சுறுசுறுப்பும் மிக்கவர் டி. டி. கே. புதுப் புதுக் கருத்துக்களை வரவேற்கும் மனோ தைரியம் கொண்டிருந்தவர். ஆங்கிலப் பேராசிரியர் கால்டோரை வரவழைத்து நம் நாட்டு வரிமுறைகளைப் பரிசீலித்து, அவருடைய சிபாரிசுகள் சிலவற்றைச் செயலில் புகுத்தியவர் டி.டி.கே. தம்முடைய பேச்சுச் சாதுர்யத்தினால், எதிர்ப்பையெல்லாம் சமாளிக்கக்கூடிய அசாதாரணத் திறமை படைத்திருந்தார். பல சமயங்களில் அவர் பேச்சுக்களில் மற்றவர்கள் மீது கடுமையும், அசட்டையும்கூடத் தொனிக்குமளவுக்கு அவர் சுதந்திரச் சிந்தனைகள் உடையவராயிருந்தார்.

உலக பாங்கிலிருந்தும் மேற்கத்திய நாடுகளிலிருந்தும் நம் நாட்டின் வளர்ச்சித் திட்டங்களுக்காக நிதி உதவியைப் பெருமளவில் கிடைக்கச் செய்தவர். இத் துறையில் அவர் அடைந்த வெற்றிகள் அவரை ஒரு சிறந்த ராஜதந்திரியாக உயர்த்திவிட்டன.

ஜவாஹர்லால் நேருவுக்குப் பின், மத்திய அரசில் தாம் எதிர்பார்த்த அளவு ஆதரவு கிடைக்காததால் அவர் தில்லியை விட்டு வெளிப்போந்தார். பெயருக்கு மட்டுமே பதவி வகிப்பது என்றுமே டி. டி. கே.க்குப் பிடிக்காது. தொழில் துறை அமைச்சராக இருந்த ஒரு சமயம், தம்மால் உருப்படியாக ஏதும் செய்ய முடியாத சூழ்நிலை ஏற்பட்டது என்பதற்காக, தமது பதவியை விட்டு அவர் விலகியதும் உண்டு.

பொருளாதாரம் மட்டுமின்றி எந்த விஷயம் பற்றியும் அவருக்கு அறிவில் தெளிவு இருந்ததால் சென்னை வழியாகச் செல்லும் எந்தப் பிரமுகரும் அறிஞரும் டி.டி.கே.யைக் கண்டு சம்பாஷித்து மகிழ்ந்து பயனுறத் தவறியதில்லை.

பண்பும், மனிதாபிமானமும் நிரம்பியவர். இலக்கியத்தில் பற்றுள்ளவராகவும் சங்கீதத்தில் பரம ரசிகராகவும் விளங்கினார். அவர் முன்னிலையில் பாடுவதை வித்வான்களும் வித்வாம்சினிகளும் ஒரு பெருமையாகவே கருதுவார்கள். டி. டி. கே. அவர்களை மந்திரிகளுக்குள் பாடகர் என்றும், பாடகர்களுக்குள் மந்திரி என்றும் அவரது இசைத் துறை நண்பர்கள் குறிப்பிடுவது வழக்கம். இன்று சென்னை சங்கீத வித்வத் சபை தனக்கென ஒரு நல்ல கட்டிடத்துடன் சோபையோடு விளங்குவதற்குக் காரண புருஷர் ஸ்ரீ டி. டி. கே. அவர்கள்தான்.

அன்பின் உருவமாக, அறிவின் சுடராக மிளிர்ந்த டி. டி. கே. மறைந்துவிட்டது நம் நாட்டிற்கு மகத்தான நஷ்டம்.

# டி. டி. கே.

பிரதமர் நேருஜியின் நம்பிக்கைக் குப் பாத்திரமான பொருளாதார நிபுணர்.

தரணி போற்றும் ராஜாஜியும் தமிழகத்தின் பெருமகனுர் காம ராஜரும்.

மகன் டி. டி. வாசுவுடனும் பேரனுடனும்.

நகைச்சுவையை ரசிக்கும் நண் பர்கள் — காமராஜ், சதாசிவம், டி. டி. கே., டி. எஸ். சந்தானம்.

பொருளாதாரம் — பாதுகாப்புத் துறைகள் ஒன்றை ஒன்று அனு சரித்து இயங்க விசேஷ மந்திரி யாக மத்திய அமைச்சரவையில் இடம் பெற்ற டி. டி. கே. வாஷிங்டன் சென்றிருந்த போது ஜனதிபதி கென்னடியைச் சந்தித்து அளவ ளாவினுர்.

நிதிமந்திரியாக இருந்த போது லண்டனில் பிரதமர் மாக்மில்லனைச் சந்தித்துப் பேசினுர்.

225 மிலியன் டாலர் அமெரிக்கக் கடனுதவி கைமெழுத்தாகிறது. இட மிருந்து வலமாக நிதி மந்திராலயக்





















காரியதரிசி எல். கே. ஜா., நிதி அமைச்சர் டி. டி. கே., அமெரிக்கத் தூதர் செஸ்டர் பௌல்ஸ்.

ஒரு குடும்ப சித்திரம்.

கவலைகளை மறக்கும் நேரம், குழந்தையைக் கொஞ்சும் சமயம். அருகில் நிற்பவர் அருமை நண்பர் டி. எஸ். கிருஷ்ணா.

பாரதப் பிரதமர் சார்பில் காமன்வெல்த் பிரதமர்கள் மகாநாட்டில் கலந்துகொள்ளச் சென்ற டி. டி. கே. அரசி எலிஸபெத் அளித்த வரவேற்பு வைபவத்தில் ஸிரிமாவோ பண்டார நாயகாவுக்கு அருகே காணப்படுகிறார்.



# இது ஒத்துழைக்கும் தருணம்

எதிர்க் கட்சியின் முதல் பணி எதிர்ப்பது தான் என்று சொல்வதுண்டு. இதில் உண்மையும் இருக்கிறது. ஆனால் ஆளும் கட்சி மிகப் பெரும்பான்மை பலம்-அதாவது ஐம்பது சதத்துக்கும் அதிகமான ஸ்தானங்களைப் பெற்றுள்ள சட்டசபையில் தான் மேற்படி உண்மை பொருந்தும். ஆயின் ஆளும் கட்சி ஐம்பது சதத்துக்குக் குறைவான ஸ்தானங்களைப் பெற்றிருந்தும் உள்ளதற்குள் பெரும்பான்மை பலம் பெற்ற கட்சி என்ற அளவிலே 'மைனாரிடி அரசு' அமைக்க ஆளுனரால் அனுமதிக்கப்படும்போது எதிர்க் கட்சிகளுக்கு வேறு ஒரு பொறுப்பு உண்டு. ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட சபை, வெற்றிகரமாக இயங்க ஒத்துழைக்க வேண்டியதே அந்தப் பொறுப்பு. அதாவது, ஆளும் கட்சி மக்களுக்குத் தீமை இழைக்க முற்பட்டாலொழிய கூடியவரையில் ஆளும் கட்சியுடன் ஒத்துழைத்து ஜனநாயக ஆட்சி இயங்க வழிவகுக்க வேண்டும். ஜனநாயகத்தை உடைத்தெறியாமல் காக்க வேண்டும்.

பாண்டிச்சேரியில் துரதிர்ஷ்ட வசமாக இந்தக் கடமையை எதிர்க் கட்சிகள் மறந்துவிட்டதாகத் தோன்றுகிறது. மந்திரி சபையை அமைக்குமாறு அழைக்கப்பட்ட கட்சிக்குப் பெரும்பான்மை பலம் இல்லை என்று எடுத்துக் காட்டி ஆட்சியைக் கவிழ்ப்பது ஒன்றே நோக்கமாகப் பாண்டியில் எதிர்க் கட்சிகள் செயல்படுவதாகத் தோன்றுகிறது.

பாண்டி சட்ட சபையில் பலப் பரீட்சை நடந்து ஆட்சி அமைந்த கையோடு கவிழ்ந்தாலோ அல்லது ராஷ்டிரபதி ஆட்சிக்கு வழி வகுக்கப்பட்டுச் சிறிது காலம் பொறுத்து மறு தேர்தல் நடக்க வேண்டும் என்ற நிலை உண்டானாலோ அது அ. தி. மு. க.வின் தோல்வி ஆகாது. ஜனநாயகத்தின் தோல்வியாகவே முடியும். அவ்வாறுநேராமல் எதிர்க்கட்சியினர் பொறுப்புணர்ந்து நடந்து கொள்வார்களா?

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## இரண்டு பக்கமும் இடி!

கோவை பாண்டிச்சேரி தேர்தல்கள் முடிந்தவுடன் தி.மு.க. தோல்வி, அ.தி.மு.க. வெற்றி காரணமாக மதுரை முத்துவுக்கு ஒரு ஞானோதயம் பிறந்து அவர் பெயர் பத்திரிகைகளில் இரண்டு மூன்று நாட்கள் அடிபட்டது. 'இரண்டு தி. மு. க.வையும் இணைக்க மதுரை முத்து முயற்சி' என்று எல்லாப் பத்திரிகைகளும் பெரிது பெரிதாகத் தலைப்புக்களைப் போட்டன. மதுரை முத்துவின் முயற்சிக்கு 'ஆசைத்தம்பியின் ஆதரவு' என்றுகூட ஒரு தினசரி செய்தி வெளியிட்டது. அது உண்மையும் ஆகும்.

ஆனால் 'மத்தளத்துக்கு இரு பக்கமும் இடி' என்பது போல் முத்துவுக்கு இருபுறமும் ஆதரவு கிடைக்கவில்லை. இடியே கிடைத்தது.

''தி.மு.க.வும் அ.தி.மு.க.வும் இணையும் பிரச்னைக்கே இடம் இல்லை. இதைப் பற்றிப் பேச ஒரு தகுதி — தரம் வேண்டாமா? மதுரை முத்துவுக்கே கருணாநிதியின் கட்சியில் (தி.மு.க.வில்) கௌரவமான இடம் இல்லை. இப்போது அவர் தம்மைக் காத்துக் கொள்ள ஓர் இடத்தைத் தேடுகிறார்'' என்று எம்.ஜி.ஆர். மறுத்துவிட்டார். ''மதுரை முத்து எங்களை நேரில் சந்தித்துப் பேசுவதற்குமுன் இதுபற்றி எதுவும் கூறுவதற்கில்லை'' என்பதாகப் பத்திரிகை நிருபர்களிடம் முதலில் சொல்லியிருந்தார் திரு கருணாநிதி. ஆனால் பின்னர், ''இணைப்பு பற்றிய யோசனையே இல்லை'' என்று திட்டவட்டமாகக் கூறிவிட்டார். எம். ஜி. ஆர். தரப்பிலிருந்து கையை விரித்தவுடன்தான் 'இணைப்பு பற்றிய யோசனையே இல்லை' என்று கூறினரோ என்று தோன்றும் படி இருக்கிறது கலைஞரின் மறுப்பு. இரண்டு தரப்புக்களிலிருந்தும் அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ள நேர்ந்த மதுரை முத்து எம்.ஜி.ஆரையும் கருணாநிதியையும் அர்ச்சித்துக் கடுமையான வார்த்தைகளை உதிர்த்துவிட்டு ஏமாற்றத்தோடு மதுரை திரும்பியிருக்கிறார்.

'''இணைக்கும் தரம் முத்துவுக்கு ஏது?' என்று எம். ஜி. ஆர். கேட்கிறார். கருணாநிதியோ என்னை 'வெளியாள்' என்று கூறுகிறார். அவருக்கும் நெடுஞ்செழியனுக்கும் இடையே நிலவிய பூசலைத் தீர்த்து வைத்த நேரத்தில் நான் வெளியாளாகத் தெரியவில்லை......'' என்று கூறியுள்ளார் மதுரை முத்து. அவர் நேரம் காலம் பார்த்து இணைப்பு முயற்சியைத் தொடங்கவில்லையோ என்னவோ? இரண்டு பக்கமுமே அவரைக் கைவிட்டு விட்டன.

## வீராணம் லாரிகள்

வீராணம் திட்டத்தின்கீழ்ப் பணியாற்றும் தொழிலாளர்களின் கூட்டம் ஒன்று மார்ச் 3ந் தேதியன்று திருக்கழுக்குன்றத்தில் நடந்திருக்கிறது. அந்தக் கூட்டத்தில் தமிழ்நாடு பொதுப் பணித் துறைப் பொது நிர்மாணத் தொழிலாளர் சங்கச் செயலாளர் அரசாங்கத்தின் மேல் ஒரு குற்றம் சாட்டியிருக்கிறார். ''வீராணம் திட்டத்தில் பயன்படுத்துவதற்காக லட்சக்கணக்கில் செலவழித்து லாரிகள், லாரி டிப்பர்கள் எல்லாம் வாங்கியிருந்தும் அவற்றைப் பயன்படுத்தாமல் வேறு தனியார் வண்டிகளுக்குக் 'காண்ட்ராக்ட்' விட்டிருக்கிறார்கள். இது ஏன் என்று தெரியவில்லை. வீராணம் திட்டத்துக்கென்றே வாங்கிய பெரிய வண்டிகளை வெறுமனே நிறுத்தி வைத்துவிட்டு, வேறு தனியார் வண்டி










வேண்டுகோள்!



அருமைத்தம்பி
எம். ஜி. ஆருக்கு.

நீ சென்றதிலிருந்து அண்ணன் மதுரை முத்து மனமுடைந்து வாடுகிறேன். உன் நினைவாகவே இருந்து கொண்டிருக்கிறேன். உடனே திரும்பிவா!

களுக்குக் கண்டிராக்ட் விடும் போக்கு' கண்டிக்கத் தக்கது.''

இப்படி நடப்பது உண்மையாயிருக்கும்பட்சத்தில் பொதுப் பணத்தைப் பாழடிப்பதை மன்னிக்கவே முடியாது. ஒரு காரியத்துக்காக அரசாங்கச் செலவில் சாதனங்களை வாங்கி அவற்றை உபயோகப்படுத்தாமல், அதே சாதனங்களை வைத்திருக்கும் பிறருக்குக் 'காண்ட்ராக்ட்' விடுவது பல சந்தேகங்களை உண்டாக்க ஏதுவாகும்.

## தமிழ்நாடு பட்ஜெட்

மத்திய பட்ஜெட் அதிர்ச்சியளித்த அளவுக்குத் தமிழ் நாட்டு பட்ஜெட் அதிர்ச்சியளிக்கவில்லை என்றாலும் பஸ் கட்டணங்கள் உயரவும், தொழில்களுக்கான மின்சார உபயோகக் கட்டணம் கூடுதலாகவும் வழி செய்திருப்பது பொதுமக்கள் அளவிலும் சில சிரமங்களை உண்டாக்கத்தான் செய்யும்.

அடுப்புக்கான விறகு,கால்நடைத் தீவனம், பெண்கள் அணியும் கண்ணாடி வளையல்கள் ஆகியவற்றின் மீதுள்ள பல முனை விற்பனை வரியைத் தமிழ்நாடு அரசு கருணைகூர்ந்து நீக்கிவிட்டது. ஆனாலும் வளையல்களையே சாப்பிட்டுவிட முடியாது. கால்நடைத் தீவனமும் கால்நடைகளுக்கு மட்டுமே பயன்படும். ஐம்பத்தொன்பது பண்டங்கள் ஒரு முனை விற்பனை வரியின் கீழ்க் கொண்டுவரப்பட்டுள்ளன. அரசாங்க ஊழியர்களுக்குப் பத்து ரூபாய் பஞ்சப்படி உயர்த்தப்பட்டுள்ளது. யானைப் பசிக்குச் சோளப் பொரி போல் பயங்கரமான விலைவாசிகள் ஏற்றத்தில் சிக்கித் தவிக்கும் நிலையில் பத்து ரூபாய் என்பது ஓர் ஆறுதல் மட்டுமே. ஆறுதல்தான் அரசாங்கத்தாலும் தர முடிந்த அம்சம்போல் இருக்கிறது. தமிழ்நாடு பட்ஜெட் ஆறுதல் என்றால் மத்திய பட்ஜெட் அதிர்ச்சி.

## இரண்டு கோடி ரூபாய் பாக்கி!

தவணை முறையில் மனைகள், குடியிருப்புக்கள் ஒதுக்கப்பட்ட வகையில் தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத்துக்கு இரண்டு கோடி ரூபாய் பாக்கி நிற்கிறதாம். இந்தப் பாக்கியைத் தராமல் இழுத்தடிப்பவர்களில் யார் யார் இருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டால் இன்னும் ஆச்சரியமாக இருக்கும். எம்.எல். ஏக்கள், ஐ. ஏ. எஸ். அதிகாரிகள் உட்பட பல்வேறு பிரிவைச் சேர்ந்த பத்தாயிரம் பேரிடம் இருந்து இந்தப் பாக்கி வசூலிக்கப்பட வேண்டும் என்கிறார்கள். பொறுத்துப் பார்த்தபின் வேறு வழி இல்லாத காரணத்தால் பாக்கி செலுத்தாதவர்களை வீடுகளிலிருந்து வெளியேற்றவும், சொத்துக்களை ஜப்தி செய்யவும் வீட்டு வசதி வாரியம் உத்தரவிடவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. எம்.எல்.ஏக்களும், அரசின் உயர் அதிகாரிகளும் இதில் மற்றப் பொதுமக்களுக்கு நல்ல முன் மாதிரியாக நடந்து கொண்டால் நன்றாயிருக்கும். ஒரு வேளை மற்றப் பொதுமக்களும் பாக்கியை நிறுத்தி வைக்க முன்மாதிரியாகத்தான் இவர்கள் இப்படி நடந்து கொள்கிறார்களோ என்னவோ ?

## பாதுகாப்பற்ற பயணம்

சமீபத்தில் பெங்களூரிலிருந்து சென்னை வரும் மெயிலில் பயணம் செய்த இரு முதல் வகுப்புப் பயணிகள் குடியாத்தத்துக்கும், காட்பாடிக்கும் இடையே அதே முதல் வகுப்பில் பயணம் செய்த இரு திருடர்களால் பின்னிரவில் கொள்ளையடிக்கப்பட்டுக் கத்திக் குத்துக்கும் ஆளாகியிருக்கின்றனர். அப்போது அந்த முதல் வகுப்புக் கோச்—அட்டெண்டர் அங்கு இருந்தாரா இல்லையா என்பது தெரியவில்லை. ஒவ்வொரு பட்ஜெட்டிலும் முதல் வகுப்புக் கட்டணம் ஏறுகிறது. ஆயினும் முதல் வகுப்புப் பயணிக்கு வெறும் பாதுகாப்புக்கூட இல்லை. வசதிகளும் குறைகின்றன. திருச்சியிலிருந்து ஐலண்டு எக்ஸ்பிரசுக்காக முதல் வகுப்பில் பயணம் செய்தபோது தமக்கு ஏற்பட்ட பல அசௌகரியங்களைப் பற்றிப் பிரபல எழுத்தாளர் திரு ஆர். கே. நாராயணன்கூடச் சமீபத்தில் மிகவும் வருந்தி ஒரு தினசரியில் கடிதம் எழுதியிருந்தார். அவர் பட்டியல் போட்டுத் தந்த அசௌகரியங்களுடன் கொள்ளைக்காரர்களிடம் உடைமைகளைப் பறிகொடுப்பது, கத்திக் குத்துக்கு ஆளாவது ஆகியவற்றையும் சேர்த்துக் கொள்ள வேண்டியதுதான் என்று எண்ணுமளவுக்கு நமது அரசின் கையாலாகத்தனம் 'பளிச்'சிடுகிறது !

---

### ராஜாஜி சிந்தனை

மனத்தைப் பண்படுத்தி வெற்றி பெற்று வேண்டாமை நிலையை அடைந்துவிட்டால் அதுவே பெருஞ் செல்வம். ஏதும் வேண்டாம் என்கிற மன நிலை எல்லாச் செல்வத்தையும்விடப் பெருஞ்செல்வமாகும். ஆசை தீராத மனம் எவ்வளவு செல்வம் இருந்தபோதிலும் துக்கப்பட்டு அலையும். செல்வத்தின் பயன் சந்தோஷம். ஆசை என்கிற நெருப்புக்குத் தீனி போடப் போட அந்த நெருப்பு வளர்ந்து வளர்ந்து மேலும் தீனி கேட்கும். தீனி போட்டால் திருப்திப்பட்டு அடங்காது. நெருப்பில் நெய் வார்த்தால் அது இன்னும் வளர்ந்து எரியும். அது போல் ஆசை. சந்தோஷத்தை அடைவதற்கு வழி ஆசைகளினின்று விடுபடுவதே. வேண்டாமையே பெருஞ் செல்வம்.

---

# அம்பாளின் ஸ்வரூபம்-2



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

**சா**தாரணமாக, பத்துப் பேருக்கு, நூறு பேருக்கு அன்னதானம் செய்கிற ஒரு நல்ல ஜீவனின் முகத்தைப் பார்த்தால் அதில் எத்தனை அன்பு சொட்டுகிறது? சாப்பிடுகிறவனை விடச் சாப்பாடு போட்டவனுக்குத்தான் அதிக ஆனந்தம் இருக்கிறது. ஒரு பத்துப் பேர் அல்லது நூறு பேருக்கு மட்டும் ஒரே ஒரு வேளை சோறு போடுகிறவனிடமே இத்தனை அன்பும் ஆனந்தமும் இருக்கின்றன. மகா பாவங்களைச் செய்து — காரியத்தில் செய்யா விட்டாலும், மனசினாலாவது மகா பாவங்களை நினைத்து — ஒரு வேளை சோறு கிடைக்கக்கூட யோக்யதை யில்லாத நம் இத்தனை பேருக்கும், கோடானு கோடி ஜீவன்களுக்கும், கல்பகோடி காலமாகச் சோறு போட்டுக் கொண்டிருக்கிற ஒருத்தி அன்னபூரணேசுவரியான அம்பாள்தான். அவளுடைய அன்பையும், அதனால் உண்டான ஆனந்த ஸ்வரூபத்தையும் நம்மால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது. அம்பாள் சௌந்தர்ய சொரூபம் என்கிறார்கள். அவளைப் பற்றி 'ஸௌந்தரிய லஹரி' என்றே ஆசார்யாள் ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். இத்தனை சௌந்தர்யம், லாவண்யம், அவளுக்கு எப்படி வந்தது என்றால், அன்புதான் அழகாகிறது. காருண்யம்தான் லாவண்யம். பாக்கி சரீர அழகு ஓர் அழகல்ல. கொஞ்சம் கோபம் வந்தால், துளி ஜுரம் வந்தால் சரீர அழகு போய்விடுகிறது. அம்பாளோ நிரந்தரமான கருணாமூர்த்தியாக எப்போதும் லாவண்யமாக இருக்கிறாள். எந்தெந்த பக்தருக்கு எந்த ரூபத்தில் மனசு ஈடுபடுகிறதோ, அந்த ரூபத்தில் வந்து அருள் செய்வதற்காகப் பல ரூபங்கள் எடுத்துக் கொண்டிருக்கிறாள். ராஜ ராஜேசுவரி, புவனேசுவரி, துர்க்கை, காளி என்று இப்படி சௌம்யமாகவும், உக்ரமாகவும் பல தினுசில் அவளை ஆராதிக்கிறார்கள்.

ஒவ்வொரு ரூபத்தையும் பிரத்தியட்சமாகத் தரிசனம் செய்ய வேண்டுமானால், அதற்கு உபாயமாக ஒவ்வொரு மந்திரம் இருக்கிறது. மந்திரம் என்பது ஒரு சப்தக் கோவை — அக்ஷரங்களின் கூட்டம். பல வடிவங்களில் இருக்கிற அம்பாளே பல சப்தங்களாகவும், அக்ஷரங்களாகவும் இருக்கிறாள். அவளுடைய அனுக்கிரகத்தால் மகா கவியாகப் பரிணமித்த காளிதாஸர் அவளை 'ஸர்வ வர்ணாத்மிகே, ஸர்வ மந்த்ராத்மிகே' என்று 'சியாமளா தண்டக'த்தில் ஸ்துதி செய்கிறார். 'வர்ணம்' என்றால் 'நிறம்' என்று நினைப்பீர்கள். 'வர்ணம்' என்றால் 'அக்ஷரம்' என்றே அர்த்தம். ஒலி வடிவான அக்ஷரங்களும், ஒளி வடிவான ரூபங்களும் ஒரே ரூபத்திலிருந்து வந்தவைதான். அவை ஒன்றுக்கொன்று நிரம்ப நெருக்கமான சம்பந்தம் உடையவை. ஸயன்ஸ் நிபுணர்கள்கூட இந்த ஒற்றுமையைச் சொல்கிறார்கள். ஜலக் கரையில் பலவிதமான சப்தங்களை எழுப்பிப் பார்த்தார்கள். அப்போது அவற்றின் அதிர்வுகளை (Vibration)ப் பொறுத்து, ஜலத்தின் மேலே மிதக்கிற இலேசான துகள்கள் வெவ்வேறு உருவங்களாக அமைந்தன. நாதத்துக்கே ரூபத்தைக் கொடுக்கிற சக்தி இருக்கிறது என்று இதனால் தெரிகிறது. ஒரு பெரிய அலை மடிந்து மடிந்து சிறு சிறு அலைகளாகி அடங்குகிற மாதிரிச் சில சப்தங்கள் இருக்கின்றன. இதை 'வீசி தரங்கம்' என்பார்கள். ஒரே கொப்புளிப்பில் பலவாகத் தெறிப்பதுபோல் விழுகிற சப்தங்களை 'கதம்பமுகுளம்' என்பார்கள். இப்படிப்பட்ட சப்தங்களை யெல்லாம் ஐம்பத்தியொரு அக்ஷரங்களாகப் பிரித்திருக்கிறார்கள். இவற்றுக்குப் பெயர் ''மாத்ருகா'' என்பது. 'மாத்ரு' என்றால் 'தாயார்' என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். சப்தமாகவும் எழுத்தாகவும் அம்பாள்தான் இருக்கிறாள். இவற்றில் சில சப்தக் கோவைகளை விடாமல் ஜபம் செய்கிறபோது, அவற்றுக்குரிய ரூபங்களும் பிரத்யட்சமாகின்றன. இப்படிப்பட்ட சப்தக் கோவைகளைத்தான் 'மந்திரம்' என்கிறோம். மந்திரமே அம்பாளின் ஸ்வரூபம்தான். கை கால் முதலான அவயவங்கள், ஆயுதங்கள் உள்ள வடிவங்களைப் போல் எல்லா மந்திரங்களும் அவள் வடிவம்தான். அதோடு கூட, இந்த மந்திரங்களை ஒருமுகப்பட்ட சித்தத்தோடு தீவிரமாக ஜபம் செய்தால், அவளே அந்தந்த மந்திரத்துக்குரிய ரூபத்தில், கர சரணாதி அவயவங்களுடனும், ஆயுதங்களுடனும் முத்திரைகள் முதலியவற்றுடனும் தரிசனம் தருவாள். இந்த மந்திரங்கள் எல்லாவற்றுக்கும் மூலமாக இருப்பது பிரணவம். அதிலிருந்துதான் இந்த நாம, ரூப, பிரபஞ்சம் முழுக்க வந்தது. நாத ஸ்வரூபிணியான அம்பாளே ஓங்காரமாகி, அந்தப் பிரணவமும் ஆவாள். அ, உ, ம மூன்றும் சேர்ந்து 'ஓம்' என்று ஆகிறது. அ—சிருஷ்டி; உ—பரிபாலனம்; ம—சம்ஹாரம் என்பார்கள். இதையே அம்பாளின் தொழிலான பரிபாலனத்தில் தொடங்கினால், உ—ம—அ— என்றாகும். அதுதான் 'உமா' என்பது. உபநிஷதமும் அவளை 'உமா ஹைமவதி' என்றே சொல்கிறது.



"**கா**மு..... காமு!''

இராமநாதனின் குரல் ஓங்கி ஒலித்தது. அருகிலிருந்த சமையல் அறையை அவர் குரல் எட்டுவதற்கு அவர் அவ்வளவு கத்தியிருக்க வேண்டாம் என்று எனக்குத் தோன்றியது. புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு வந்து நின்ற அம்மாளைப் பார்த்தேன். உழைத்து ஓடாகத் தேய்ந்திருந்தது போன்ற தேகவாகு. வெளிறிய உதடுகள். கணவரை ஏறிட்டு 'என்ன' என்பதுபோல் பார்த்த பார்வையில் பயமும் பக்தியும் தெரிந்தன.

''நம்ம திருச்சி சங்கரய்யரின் மருமான். இந்த ஊரிலே வேலையாகி யிருக்கு. கொஞ்ச நாட்களுக்கு இங்கேதான் தங்கப் போகிறான். சாமானெல்லாம் போட்டு வைச்சிருக்கிற அந்த வாசப் பக்கத்து அறையை இவனுக்கு ஒழிச்சுக் கொடுத்துடு. சாப்பாடெல்லாம் வெளியே பார்த்துக்கறேன்னுட்டான்..... ஆமாம், மணி ஆறுகப் போகிறதே, எங்கே ரேவதியைக் காணோம் ?''

''என்னமோ தெரியலையே....'' என்று மென்று விழுங்கப்பட்ட வார்த்தைகள் அரையும், குறையுமாகக் கேட்டன.

இடைகழியில் யாரோ செருப்பைக் கழற்றும் ஒலி. அதைத் தொடர்ந்து உள்ளே நுழையும் பெண்தான் அந்த 'ரேவதி'யாக இருக்க வேண்டும்.

'' ஏன் இவ்வளவு தாமதம் ? வீட்டில் பெரியவர்களெல்லாம் கவலைப்படுவார்களே என்ற பொறுப்பு கொஞ்சமாவது இருக்கிறதா, இல்லையா ?''

'' ஆபீஸிலே வேலை அதிகம். முடித்து விட்டுத்தான் போகணும்னார் அதிகாரி.''

''ஆமாம். உன்னால்தானே உங்க ஆபீஸ் நடக்கிறது? எதையாவது சொல்லிக் கத்திரித்துக்கொண்டு வரவேண்டியதுதானே? சரி, சரி! உள்ளே போ.....'' எனக்கு மிகவும் சங்கடமான நிலைமை. அலுவலகத்திலிருந்து வந்து நுழையும் சுமார் இருபது வயதுப் பெண்ணை, புதியவனான என் முன்னிலையில் அவர் நடத்தியவிதம் எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. ஓர் அந்நியனுக்கெதிரில் தன் சுயகௌரவம் மிதிக்கப்பட்டுவிட்ட அவமானத்தில், தலை குனிந்தபடி அந்தப் பெண் உள்ளே சென்றாள்.

**நா**ன் அங்கு தங்க ஆரம்பித்துச் சுமார் பத்து நாட்களாகி விட்டன. அவர்களோடு நன்கு பழகி, ஒரு சகஜ பாவத்தைக் கொண்டு வரவேண்டும் என்று நான் முயன்றாலும், நான் கேட்கும் பத்து கேள்விகளுக்கு ஒரு பதில் சொல்லும் காமு மாமியையும், கூடியவரை என் கண்ணிலேயே படாமல் உள்ளே பதுங்கிக் கொண்டிருக்கும் ரேவதியையும் நினைக்கும்

# எண்ணங்கள் கனவாகும் போது

'பாரதி'




போது. அது சாத்தியமாகாததொன்றாகவே எனக்குத் தோன்றியது. சில சமயங்களில் எனக்குப் பேச்சுத் துணையாக, என் தனிமையைப் போக்க வருவது ராமநாதனின் ஒரே மகன் பாலுதான்.

காலை ராமநாதனிடம் இரவல் கொடுத்திருந்த தினசரித் தாளை வாங்குவதற்காக உள்ளே சென்றேன். ஒரு புதிய மனிதருடன் ராமநாதன் உரையாடிக் கொண்டிருந்தார். அவர்கள் உரையாடலில் ரேவதியின் திருமண விஷயம் அடிபடுவது அரைகுறையாகக் கேட்டது. அறைக்குத் திரும்பிய என் மனத்தின் அடித்தளத்தில் ஒரு நெருடல்.

'ரகுவுக்கு வேலை கிடைத்ததும், அடக்கமான அழகும், குடும்பப் பாங்கும், சுமாரான படிப்பும் உள்ள ஒரு பெண் கிடைத்தால், அவனுக்குக் கல்யாணம் பண்ணிவிட வேண்டும்' என்று என்னைக் குறித்து என் மாமா அடிக்கடி கூறுவதுண்டு. இதுவரை என் திருமணத்தைப் பற்றி அதிக சிந்தனைக்கு இடம் கொடுக்காத நான், இப்போதெல்லாம் மாமாவின் சொற்களை நினைத்துக் கொள்ளும்போது, ரேவதியின் எழிலுருவம் நிழற்படம்போல் என் மனக்கண் முன்னால் விரிகிறது. குத்துவிளக்கின் மங்கல ஒளியைப் போன்று கண்ணுக்கு இதமான அழகும், இளந் தென்றலைப் போல் மென்மையான அசைவுகளும் கொண்ட ரேவதி, என் உணர்வின் நரம்புகளை மீட்டி, அனுராகங்களை என் நெஞ்சில் எழுப்பி வருவதை உணர்ந்தேன்.

அலுவலகத்துக்குப் புறப்படத் தயாரான என்னைக் கிசுகிசுத்த குரலில் அழைத்தாள் காமு மாமி.

''ரகு! ரேவதி இப்போதுதான் கிளம்பிப் போகிறாள். பேனாவை மறந்து விட்டாள். நீ போகும் வழியில் இதை அவளிடம் கொடுத்து விடேன்.....''

விறுவிறுத்த நடையுடன் பஸ் ஸ்டாண்டை அடைந்து, அங்கு நின்று கொண்டிருந்த ரேவதியிடம் பேனாவைக் கொடுத்தேன்.

''தாங்க்ஸ்'' என்று கூறிப் பெற்றுக்கொண்டாள் ரேவதி.

''இப்போதுதான் கிளம்பியதாக அம்மா சொன்னாள். அதற்குள் இங்கு வந்து நின்று கொண்டிருக்கிறாயே?'' என்றேன் சன்னமாகச் சிரித்துக் கொண்டே. இலேசான புன்னகை ஒன்றுதான் பதிலாக வந்தது.

''வெகுதூரம் போக வேண்டுமா? ஆபீஸ் எங்கே இருக்கிறது?''

உரையாடலை வளர்த்த விரும்பினேன்.

''மவுண்ட் ரோட்டில் 'போஸ்ட்ஸ் அண்டு டெலிகிராஃப்ஸ் ஆபீஸ்'....''

சுருக்கமான பதில். அதற்குள் அவளுக்குரிய பஸ் வந்துவிடவே, ஒரு தலையசைப்புடன் விடைபெற்றுக் கொண்டாள்.

மாலை மணி ஐந்திருக்கும்.

மவுண்ட்ரோடு அலுவலகத்தினுள் ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு, இறுதியாக ரேவதியின் இருக்கையை அடைந்தேன். அவ்விடத்தில் என்னை அவள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை என்பதற்குச் சான்றாக, கேள்விக்குறி போல் புருவத்தை வளைத்து என்னைப் பார்த்தாள்.

''ஒரு 'ரெஜிஸ்ட்ரேஷனு'க்காக இங்கு வந்தேன். நீ இங்குதான் இருக்கிறாய் என்பதால் அப்படியே உன்னையும் பார்த்துவிட்டுப் போகலாம் என்று தோன்றியது....''

'அவளுடன் பேசுவதற்காகவே விழுந்தடித்துக் கொண்டு வந்திருக்கிறேன்' என்பதை நேரடியாக ஒப்புக்கொள்ள என் மனம் இடம் தராததால், துணிந்து ஒரு பொய்யைச் சொன்னேன்.

''இப்போது நேரமாகிவிட்டதால் கிளம்ப வேண்டும். ஐந்து பதினைந்துக்கு ஒரு பஸ் இருக்கிறது...'' என்று கடிகாரத்தைப்பார்த்த படி இருக்கையை விட்டு எழுந்தாள். இருவரு மாக அலுவலகத்துக்கு வெளியே வந்தோம்.

''ரேவதி ! உனக்கு ஆட்சேபணை எதுவும் இல்லையென்றால் எதிரே உள்ள ஹோட்டலில் காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாமே ! நானும் உன்னுடன் கொஞ்சம் பேச வேண் டும்.....'' என்றேன், சற்றுத் தயக்கத்துடன். வியப்புடன் என்னைப் பார்த்த அவள் சிறிது யோசனைக்குப்பின் தலையை அசைத்தாள்.

சிற்றுண்டி விடுதியில் சிற்றுண்டிக்கும், காப் பிக்கும் 'ஆர்டர்' கொடுத்தேன். கைவிரல் களால் மேசையின் மேல் கோலமிட்டுக் கொண்டிருந்தாள் ரேவதி. சில விநாடிகள் மௌனமாகக் கழிந்தன. மௌனத்தைக் கலைத்தவன் நான்தான்.

''காலையில் உன் அப்பாவின் பேச்சுக்கிடை யில், என் பெயர் அடிபட்டதே, என்ன சொல் லிக் கொண்டிருந்தார் ?'' என்று கேட்டேன்.

'' ஏன்? உங்களைப் பற்றி மிகவும் உயர் வாகத்தான் சொல்லிக் கொண்டிருந்தார். எம். எஸ்ஸி. முதல் வகுப்பில் பாஸ் செய்திருக் கிறீர்களாம். 'ரொம்பப் புத்திசாலி, அதே சமயத்தில் பெரியவர்களுக்கு அடங்கிய சாதுப் பையன்' என்றும் சொன்னார்.....''— ரேவதி பதில் அளிக்கையில் அவளையும் மீறிக் கொண்டு பொங்கிய சிரிப்பை முதன் முறை யாக அனுபவித்தேன்.

''உன் அப்பா ரொம்பக் கோபக்காரரோ? வீட்டில் அவரைத் தவிர, நீங்களெல்லாம் மூச்சுவிடக்கூட பயப்படுகிறீர்கள் போல் இருக் கிறதே ?''

'' அதெல்லாம் இல்லை......''

''அது சரி, உன் திருமண விஷயம் எவ் வளவு தூரத்தில் இருக்கிறது?''

''திருமணவிஷயமா?....'' என்று திகைப்பு மேலிடக் கேட்டாள்.

'' உனக்கு ஒரு வரன் பார்த்ததாகவும், வரதட்சிணை காரணமாக அது சரிப்பட்டு வர வில்லையென்றும், உன் அப்பாகூடச் சில நாட்களுக்குமுன் ஒரு நண்பருடன் ஏதோ பேசிக் கொண்டிருந்தாரே?....''

பதில் ஏதும் கூறாமல் சிந்தனையில் ஆழ்ந் திருந்த ரேவதியிடமிருந்து, நெடுமூச்சு ஒன்று மட்டுமே வெளிப்பட்டது.

''இதற்கு மேல் இதைப் பற்றி உன்னிடம் நான் எதுவும் கேட்கப் போவதில்லை. எனக்கு இப்போது தாய், தந்தை எல்லாமே என் மாமாதான். 'அழகான, அடக்கமான பெண் கிடைத்தால், உடனே எனக்கு எழுது. உனக் குக் கல்யாணம் பண்ணி வைக்க நான் தயார்' என்று என் மாமா சொன்னார். அவர் பிள்ளை களுக்குக்கூட வரதட்சிணை என்று அவர் ஒன்றும் வாங்கவில்லை. உன்னைப் பற்றி அவ ருக்கு எழுதட்டுமா, ரேவதி ?'' — நாசூக்காக என் விருப்பத்தை வெளியிட்டுவிட்டு, நம் பிக்கையுடன் அவள் முகத்தைப் பார்த்தேன்.

''மிஸ்டர் ரகு! வரதட்சிணை வேண்டு மானால் உங்கள் வீட்டில் வாங்கிக் கொள்ள மாட்டார்கள். ஆனால் 'டீஸெண்டாக'த் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்று எதிர்பார்க்க மாட்டார்களா? வெறுங் கையை வைத்துக்கொண்டு எப்படி முழும் போடுவது?''

''நீ என்ன சொல்கிறாய் ரேவதி ?''

''என் திருமணத்துக்காக என் அப்பா ஒரு பைசாகூடச் சேர்க்கவில்லை என்கிறேன். அத்துடன் எனக்குத் திருமணம் செய்யும் எண்ணமும் அவருக்கு இல்லை. ரிடையராகும் போது தமக்குச் சேர வேண்டிய பணத்தை மொத்தமாக வாங்கிக் கொண்டு, அத்தனை யையும் கரைத்துவிட்டார். இப்போது குதிரைப் பந்தயம், சீட்டாட்டம் போன்ற அவர் பழக்கங்களுக்கு, குடும்பத்துக்குச் செலவழித்தது போக, என் சம்பளம் அதிக மாக மீதமாகவில்லையே என்று கவலைப்படு கிறார். 'நானும் என் பெண்ணுக்கு வரன் பார்க்கிறேன்' என்று ஜாதகக் கட்டைத் தூக்கிக் கொள்வதும், நாலு பேரிடம் பேசு வதும் அவருக்கு ஒரு 'ஹாபி!''

அவள் குரலில் விரக்தி தோய்ந்திருந்தது.

காப்பியை அருந்திவிட்டு ஹோட்டலை விட்டு வெளியேறி, பஸ் ஸ்டாப்பை நோக்கி நடந்தோம்.

''ரேவதி ! எனக்கு ஒரு 'சான்ஸ்' கொடு. உன் அப்பா இதற்கு என்னதான் சொல்கிறார் என்று பார்ப்போமே !'' என்றேன்.

''ஓகோ ! உங்களுக்கு இன்னும் துணிச்சல் இருக்கிறதா ? முயன்று பாருங்கள்..... அதோ! நம் பஸ்ஸும் வந்துவிட்டது. வீட் டுக்குப் போனதும் நம்மைப் பார்த்துவிட்டு அப்பா கேட்டால் நாம் எதேச்சையாகச் சேர்ந்து வருவதாகவே இருக்கட்டும். 'நல்லவன்' என்று உங்களுக்கு அப்பா கொடுத் திருக்கும் பட்டத்தையும், அப்புறம் வாபஸ் வாங்கிக் கொண்டுவிடப் போகிறார்.''

மனத்தில் பெருஞ் சுமையை வைத்துக் கொண்டு கலகலவென்று சிரிக்க இவளால் எப்படி முடிகிறது?

வழி நெடுகக் காணும் காட்சிகள் எதிலுமே ஒன்றாமல், என் மனம் அலைபாய்ந்துகொண் டிருந்தது.

**ம**று நாள்.

''சார்.....!''

ஸ்நானம் செய்துவிட்டுத் தலையைத் துவட்டியவண்ணம் வாசற்புறம் வந்தவரைக் கூப்பிட்டேன்.

''நான் இங்கு வந்து இன்றோடு ஒரு மாதம் ஆகிறது சார். வாடகையாக இந்த நாற்பது ரூபாயை வைத்துக் கொள்ளுங்கள்.....''

''அடேடே ! என்னப்பா இதெல்லாம் ? உன் மாமாவும் நானும் சிறு வயது முதல் பழகியவர்கள். எங்கள் 'பிரண்ட்ஷிப்' எல் லாம் உனக்கு எப்படித் தெரியப் போகிறது ? உனக்கு உன் கௌரவம்தான் பெரிதாயிருக் கிறது. உனக்காக நான் வாங்கிக் கொள் கிறேன். நீ ஒரு சம்சாரியாகும் வரையில் இங் கேயே கூச்சப்படாமல் இருக்கலாம்....''

அவருடைய அந்தச் சாதுரியமான பேச் சைக் கேட்டு அயர்ந்து போனேன்.

''சார்! என் மாமாவின் தாராள குணம் உங்களுக்குத் தெரிந்திருக்கும். அதனால்... வந்து.... உங்களுக்கு அதிகமாகச் சிரமம் கொடுக்காமல் உங்கள் பெண் ரேவதியை நான் மணந்து கொள்ளலாம் என்று நினைக்

# பேரெழில் கொஞ்சும் முகம்...

## ...ஃப்ரெஸ்கா தரித்த முகம்




**மேல் மினுக்கற்ற மேனிவண்ண
மெல்லழகை உமக்கு
சொந்தமாக்குவதற்கென்றே
உருப்பெற்ற ஒரே ஒரு வதன
டால்கம் : ஃப்ரெஸ்கா.**

மணம் கமழும் ஃப்ரெஸ்கா. மென்மை-
யிலும் மென்மையான டால்கம்.
இலேசாக முகத்தோடு இழைந்து,
என்றுமில்லா எழில் பரப்பும்.

# fresca

ப்யூட்டி டால்க் கோத்ரெஜ் தயாரிப்பு

## முகத்திற்குரிய முதன்மைப் பவுடர்: ஃப்ரெஸ்கா

Interpub/GSF/10/73 Tam

# மைக்ரோஃபைன்ட்
# ஆஸ்ப்ரோ

## அதிவேகமாகக் கரைந்து, அதிவேகமாகக் கிரகிக்கப் படுகிறது. அதனால்தான் அது அதிவேகமாக வலியைப் போக்கி விடுகிறது–

**சாதாரண வலிநிவாரண மாத்திரைகளைவிட இருமடங்கு அதிக வேகத்துடன் வலியைப் போக்கி விடுகிறது**









சாதாரண மாத்திரைகளைப் போலன்றி, ஆஸ்ப்ரோவின் நுண்ணிய அணுக்கூறுகள் அதி வேகமாகக் கிரகிக்கப் படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. உங்களுக்கு அதிவேக நிவாரணம் அளிக்கின்றன.

கீழ்க்கண்டவைகளுக்கு மைக்ரோ:.பைன்ட் ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்: தலைவலி • உடல் வலி • ஜலதோஷம் • ஃப்ளு • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவைப் பட்டால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

**ஆஸ்ப்ரோ** மட்டுமே **மைக்ரோ:.பைன் செய்யப் படுகிறது, அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.**

நிகோலஸ் (N) தயாரிப்பு

A.G.57 TM

## பையிலே கை!

ஓர் ஓவியர் மாபெரும் தலைவர் ஒருவரின் படத்தை வரைந்தார். படத்தைப் பார்த்த நண்பர், ''மாபெரும் தவறு செய்து விட்டாயே!'' என்றார்.

''என்ன?'' வியப்புடன் கேட்டார் ஓவியர்.

''படத்தில் தலைவரின் கைகளை அவரது பைகளுக்குள்ளே அல்லவா நினைத்து விட்டாய்? பக்கத்தில் உள்ளவர்களின் ஜிப்பாப் பைகளுக்குள் அல்லவா நுழைத்திருக்க வேண்டும்!'' -குறும்பன்



---

கிறேன். என் மாமா இதற்கு நிச்சயம் சம்மதிப்பார்.....'' என்று தயக்கத்துடன் நிறுத்தினேன்.

அட்டகாசமாகச் சிரித்தார் இராமநாதன்.

''இந்தக் காலத்துப் பையன்களின் பேச்சே வேடிக்கையாக இருக்குப்பா. உன் மாமாவுக்கு எழுதி உன் ஜாதகத்தை வரவழை. மீதியை அப்புறமாகப் பார்த்துக் கொள்ளலாம்.''— செருப்பை மாட்டிக் கொண்டு அவர் வெளியே கிளம்பிவிட்டார். உட்பக்க அறையில் ஒரு புத்தகத்தைப் படிப்பது போல் உட்கார்ந்திருந்த ரேவதி, நிமிர்ந்து பார்த்தது ஜன்னல் வழியாகத் தெரிந்தது. 'முதற்படி வெற்றி தான்' என்பது போல் அவளை நோக்கிப் புன்னகை செய்தேன். அவளும் தலையைக் குனிந்து கொண்டு தனக்குள் சிரித்துக் கொண்டாள். எதற்காகவோ ?

மறு நாளே நான் மாமாவுக்கு எழுதிய விரிவான கடிதத்துக்குப் பதிலும் வந்தது. என் ஜாதகமும் வந்தது. 'அவர் பார்த்தால் போதும். எனக்கு ஜாதகத்திலெல்லாம் நம்பிக்கையில்லை' என்று எழுதியிருந்தார்.

இரண்டு நாட்கள் கழிந்தன. கையில் ஜாதகங்களோடு என் அறைக்கு வந்தார் ராமநாதன்.

''ரகு! உன்னிடம் சொல்வதற்கு ரொம்ப வருத்தமாக இருக்குப்பா. சுப்பிரமணியன்னு என் நண்பர் ஒருத்தர் பெரிய ஜோசியர். அவர்கிட்டே காண்பிச்சேன். 'ரஜ்ஜு' தட்டறது. இந்த ரெண்டு ஜாதகங்களும் பொருந்தவே இல்லேன்னுட்டார். நாம் நினைக்கிற மாதிரியெல்லாம் நடந்துடறதா என்ன? என் பெண்ணுக்கு மாப்பிள்ளை எங்கே பிறந்திருக்கானோ ?''

''சார்! என் மாமா பிள்ளைகளுக்கெல்லாம் ஜாதகமே பார்க்காமல்தான் அவர் கல்யாணம் பண்ணினார். இதிலெல்லாம் என்ன சார் இருக்கிறது?''

நான் முடிக்கவில்லை. ஆவேசம் பொங்கியது அவருக்கு.

''இதோ பார், நான் வேறே, அவர் வேறே. எனக்கு அதிலெல்லாம் அசைக்க முடியாத நம்பிக்கை. அதோட நாளைக்கு என் பெண் கலங்காமல் நன்னா வாழணும்கிற எண்ணம் எனக்கு இருக்கு. அதனாலே, இந்தக் கல்யாணத்துக்கு நான் சம்மதிக்கவேமாட்டேன்.''

அன்று முழுதும் கனன்று கொண்டிருந்த மனத்தை ஒருநிலைப்படுத்தி, ஒரு திடமான முடிவுக்கு வந்தேன்.

**ம**று நாள் காலை. அலுவலகத்துக்குப் புறப்பட்ட ரேவதியைப் பின்தொடர்ந்தேன். ''ரேவதி! இன்று ஒரு நாள் உனக்கு 'லேட்' ஆனாலும் பரவாயில்லை. இந்தப் பிரச்னைக்கு ஒரு முடிவு தெரிய வேண்டும்.....''

''பிரச்னையா? அதுதான் 'சால்வ்' ஆகிவிட்டதே ரகு!''

''இல்லை. இப்போதுதான் ஆரம்பித்திருக்கிறது. உன் அப்பா சொன்னதைக் கேட்டாயா....?''

''நான் இவ்வளவுதூரம் சொல்லியும்கூட என் அப்பாவை நீங்கள் புரிந்து கொள்ளாதது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. என் அப்பா உண்மையாகவே பொருத்தம் பார்த்திருப்பார் என்று நினைக்கிறீர்களா?''

நான் அதிர்ந்து போனேன்.

''ஆமாம், ரகு! தட்டிக் கழிப்பதற்கு வேறு எதுவுமே அகப்படாததால்தான் இந்த வழி! நிஜமாகவே ஜோஸ்யரிடம் போய் அவர் 'பொருந்துகிறது' என்று சொன்னாலும் உபயோகமில்லை. 'என் சொல்லை மதிக்காமல், தான்தோன்றிபோல் காரியம் செய்யும் பையனுக்குப் பெண்ணைத் தர எனக்கு விருப்பமில்லை' என்று சொல்லிவிடுவார் என் அப்பா. அவருடைய சாமர்த்தியத்தை எவ்வளவு சாமான்யமாக எண்ணி விட்டீர்கள்?''

''ரேவதி! உன் அப்பாவின் கோபத்தை நீ மதிக்காத பட்சத்தில், நாம் பதிவுத் திருமணம் செய்து கொள்ளலாம். அப்புறம் நீ என் நிழலில்தானே இருக்கப் போகிறாய்?''— இறுதியான என் முடிவைத் துணிவுடன் வெளியிட்டேன்.

''சின்ன வயதிலேயே பெற்றோரை இழந்து விட்டதனாலேயோ என்னமோ, நீங்கள் இப்படிப் பேசுகிறீர்கள். ஆனால் எனக்குத் தெரியும், ஏற்கனவே நைந்து போயிருக்கும் என் அம்மாவின் மனத்துக்கு மேலும் அதிர்ச்சிகளையோ, துயரங்களையோ தாங்கும் சக்தி இல்லை. நான் ஓர் ஆணாகப் பிறந்திருந்தால் என் அம்மாவைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு எனக்கு இருந்திருக்கும் இல்லையா? அதுபோல் நினைத்துக்கொள்கிறேன். உணர்ச்சி இல்லாத மரக்கட்டை போல் வாழப் பழகிக் கொள்கிறேன். வீட்டின் தலைவராகப் பொறுப்புக்களை ஏற்று, தனக்குப் பிறந்தவைகளை சந்தோஷமாக வாழ வைக்க வேண்டியவர் எப்போது நேர்மையில்லாதவராக இருக்கிறாரோ, அப்போது நான் அப்படித்தான் பழகிக் கொள்ள வேண்டும். மிஸ்டர் ரகு! தயவு செய்து இனிமேலும் என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்!'' கைக்குட்டையில் முகத்தை அழுத்திப் பொங்கி வந்த துயரத்தை அடக்கிக் கொண்டாள்.

கனத்த உள்ளத்துடன் நடந்தேன். என் முயற்சிகளையெல்லாம் மீறிய பெருத்த ஏமாற்றம்... எதுவாயிருந்தால் என்ன? என் இதயத்தில் முதன் முதலாகக் கனிந்து எழுந்த ஓர் இன்பஉணர்வு, கனவாக்கப்பட்டுவிட்டது.

(ஸ்தாபிதம் : 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்கராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

தந்தி : 'EVERMANS', போன் : 85834 • தபால்பெட்டி : 414

### நீண்டகாலச் சீட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகிய காலச் சீட்டுகள்

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள் : புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா - கோயம்புத்தூர்




எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

# சிவகாமியின் சபதம்

அத்தியாயம் 19

## வந்தான் குண்டோதரன்



படைகளின் முழக்கத்தைக் கேட்டதும், சற்றுப் பின்னால் வந்து கொண்டிருந்த ஆயனரும் புத்த பிக்ஷுவும் வேகமாக நடந்து வண்டியை நெருங்கி வந்தார்கள்.

முன்னணிப் படை கண்ணுக்குத் தெரிந்ததும், வண்டி சாலையில் ஒதுக்குப் புறமாக நின்றது; சிவகாமியும் அத்தையும் வண்டியிலிருந்து இறங்கி நின்று கொண்டார்கள். படை வரும் முழக்கம் அத்தையின் காதில் விழாதபடியால், மற்றவர்களைப் போல் அவளிடம் பரபரப்பு இல்லை.

புத்த பிக்ஷு சாலை ஓரத்து மரத்தின் பின்னால் தெரிந்தும் தெரியாததுமாக நின்று கொண்டார். அவர் இராஜ வம்சத்தினரைக் கண்ணாலும் பார்ப்பதில்லை என்பது போன்ற விரதங்கள் கொண்டவர் என்பது தெரியுமாதலால் அவர் மறைந்து நிற்பது பற்றி மற்றவர்களுக்கு வியப்பு ஏற்படவில்லை.

ஆனால், எல்லோருக்கும் மனம் ஒருவாறு கலக்கமடைந்துதான் இருந்தது. வருகிறது என்ன படை? எங்கே போகிறது? எதற்காக?

தெற்கே இருந்து வருகிறபடியால் அது வாதாபிப் படையல்ல என்பது நிச்சயம். பின்னே யாருடைய படை?

* * *

காஞ்சியிலிருந்து கிளம்பி வருகிற வழியில் நம் பிரயாணிகள் பெரும்பாலும் யுத்தப் போக்கைப் பற்றியும், யுத்த முடிவு என்ன ஆகும் என்பதைப் பற்றியும் பேசிக் கொண்டு வந்தார்கள். யுத்தத்தை நினைவூட்டும் காட்சிகளே எங்கெங்கும் தோன்றி வந்தன.

சாலையில் ஜன நடமாட்டம் அதிகமாயிருந்தது. எல்லோரும் தெற்கு நோக்கிப் போகிறவர்களாகவே இருந்தார்கள். அநேகமாக அவர்கள் அனைவரும் காஞ்சி நகரிலிருந்தும், காஞ்சிக்குச் சுற்றிலுமுள்ள கிராமங்களிலிருந்தும் யுத்த நிலைமையை முன்னிட்டுப் புறப்பட்டவர்கள். அப்படிப் புறப்பட்டு வந்தவர்களிலே ஸ்திரீகள், குழந்

அமரர்

கல்கி



தைகள், வயோதிகர்கள், ஆண்டிப் பரதேசிகள், கூனர், குருடர், காபாலிகர் முதலியோர் அதிகமாகக் காணப்பட்டார்கள்.

முக்கியமாகக் காபாலிகர்கள் வழியெல்லாம் பல்லவ இராஜ குலத்தைச் சபித்துக் கொண்டு போனார்கள். காஞ்சி நகரில் கள்ளுக் கடைகளை மூடித் தங்களை நகரை விட்டுத் துரத்திய குமார சக்கரவர்த்தியின் பேரில் அவர்கள் தங்களுடைய சாபங்களுக்குள்ளே மிகக் கடுமையான சாபங்களைப் பொழிந்து கொண்டு போனார்கள். நராதமர்களுக்குள்ளே அதமனான மாமல்ல நரசிம்மன் என்னும் சண்டாளனை ரணபத்திர காளிக்குப் பலி கொடுத்துத் தாங்கள் மதுபானம் செய்யும் மாட்டுக் கொம்பிலே அவனுடைய இரத்தத்தை ஏந்திக் குடித்துத் தங்களுடைய பயங்கரமான மரண தாகத்தைத் தணித்துக் கொள்ளப் போவதாக அவர்களில் பலர் உரத்த சத்தம் போட்டுச் சபதம் செய்தார்கள். இன்னும் சிலர், மாமல்ல நரசிம்மனையும் தளபதி பரஞ்சோதியையும் சேர்த்துக் கட்டி, மயான ருத்திரனுக்குப் பிரீதியாக உயிரோடு கொளுத்தி, அவர்களுடைய எலும்புச் சாம்பலைத் தங்கள் உடம்பெல்லாம் பூசிக் கொண்டு உஷ்ணம் தணியப் போவதாகச் சபதம் செய்தார்கள். இந்தச் சாபங்கள், சபதங்கள் எல்லாம் பிராகிருத பாஷையிலும், வேறு கலப்பு மொழிகளிலும் செய்யப்பட்டதானது அந்தக் காபாலிகர்கள் வட தேசத்திலிருந்தும், மேற்குப் பிராந்தியத்திலிருந்தும் வந்தவர்கள் என்பதைத் தெரியப் படுத்தியது.

சிவகாமிக்கு ஆங்காங்கு வண்டியில் பிரயாணம் செய்தபடியாலும், அவளுடைய உள்ளம் வேறு வேறு உலகங்களில் சஞ்சரித்துக் கொண்டிருந்தபடியாலும் அவளுடைய காதில் அந்தப் பயங்கரச் சாபங்கள் ஒன்றும் விழவில்லை. ஆனால் ஆயனருடைய காதில் அவை எல்லாம் கர்ண கடூரமாக விழுந்தன. அவற்றைக் கேட்கச் சகிக்காமல் அவர் காதைப் பொத்திக் கொண்டார்.

புத்த பிக்ஷுவின் செவிகளுக்கு மட்டும் அந்தச் சாபங்கள் எவ்வித அருவருப்பையும் அளித்ததாகத் தெரியவில்லை. அதற்கு மாறாக, அவருடைய முகத்தின் கடூரத்தை இன்னும் கடூரமாக்கிக் கொண்டு சில சமயம் புன்னகை தோன்றியது.

**பி**க்ஷு ஒரு தடவை காபாலிகர் கூட்டத்தில் புகுந்து பேசிக் கொண்டிருந்துவிட்டு, வெளிவந்து ஆயனரை அணுகியதும், ''ஆயனரே! எப்போதாவது நான் புத்த சமயத்தைத் துறந்து சைவனாகும் பட்சத்தில் காபாலிகத்திலேயே சேர்வேன்!'' என்றார்.

இதைக் கேட்டு ஆச்சரியமடைந்த ஆயனர், ''சுவாமி! அத்தகைய எண்ணம் தங்களுக்கு ஏன் வர வேண்டும்? புத்த சமயத்தின்மீது தங்களுக்கு என்ன கோபம்? யுத்தங்களினால் ஏற்படும் சங்கடங்களையும், துன்பங்களையும் பார்க்கப் பார்க்கப் புத்த பகவான் காட்டிய அஹிம்ஸா மார்க்கமே உத்தமமான மார்க்கம் என்றல்லவா எனக்கே இப்போது தோன்றி வருகிறது?'' என்றார்.

''அதனாலேதான் நானும் சொல்லுகிறேன். நீங்கள் கால சம்ஹார மூர்த்தியைக் கைவிட்டுப் புத்த பகவானை அடைவதாக இருந்தால் அதற்குப் பிரதியாகக் காபால ருத்திர மூர்த்திக்கும் ஓர் அடியார் வேண்டுமல்லவா?'' என்று நாகநந்தி கூறியது ஆயனருக்கு மேலும் மனக் குழப்பத்தை உண்டாக்கிற்று.

சாலையில் அபூர்வமாகத் தெற்கேயிருந்து வரும் பிரயாணிகள் சிலர் காணப்பட்டபோது அவர்களைக் காஞ்சிப்பக்கமிருந்து வருகிறவர்கள் நிறுத்தி, ''தெற்கே என்ன விசேஷம்?'' என்று



கேட்பார்கள். அவர்கள் மறுமொழி சொல்லி விட்டுக் காஞ்சி நிலைமையைப்பற்றி விசாரிப்பார்கள். இத்தகைய பேச்சுக்களை யெல்லாம் நாகநந்தி ஆங்காங்கு நின்று வெகு சுவாரசியமாகக் கவனிப்பார்.

இப்படி ஒரு தடவை கூட்டத்தில் நின்று பேச்சுக் கேட்ட பிறகு, நாகநந்தி ஆயனர் சிவகாமி இருவர் காதுகளிலும் விழும்படியாக, ''நாம் ஒன்று நினைக்க யுத்த தேவன் வேறொன்று நினைக்கிறான் போலல்லவா தோன்றுகிறது? உத்தேசித்தபடி நமது பிரயாணம் நடைபெறாது போலிருக்கிறதே!'' என்றார்.

''அப்படியா? புத்த தேவர் என்ன கருணை செய்கிறார்? அவருடைய திருவுள்ளம் என்ன?'' என்றார் ஆயனர்.

''அத்தையைப் போல் அப்பாவுக்கும் காது மந்தமாகி வருகிறது!'' என்று கூறிச் சிவகாமி புன்னகை புரிந்தாள்.

அந்த நகைச்சுவையை அனுபவித்த நாகநந்தி செவிடருடன் பேசுவது போன்ற உரத்த குரலில், ''ஆயனரே, நான் புத்த தேவரைச் சொல்லவில்லை; யுத்த தேவனைச் சொல்கிறேன்'' என்றார்.

''அப்படியா? யுத்த தேவன் என்ன சொல்கிறார்? நம்மை வழி மறிக்கப் போகிறாரா?''

''அப்படித்தான்!'' என்று சொன்ன நாகநந்தி மறுபடியும் மெல்லிய குரலில்



கூறினர்: ''பல்லவ இராஜ்யத்துக்கு எதிர்பாராத ஆபத்துக்கள் எல்லாம் வந்து கொண்டிருக்கின்றன. மேற்கே யிருந்து கங்க நாட்டுச் சைனியம் படை எடுத்து வந்து எல்லைப்புறத்தில் நிற்கிறதாம். தெற்கே பாண்டிய மன்னர் பெரும் படை திரட்டிக் கொண்டு வருகிருராம். பாண்டிய சைனியம் கிழக்குச் சோழ நாட்டு எல்லைக்கே வந்து விட்டதாம். வட திசையிலிருந்து வரும் வாதாபி சைனியத்தைப் பற்றித்தான் உங்களுக்கே தெரியும். பல்லவ சைனியம் தப்பிப் பிழைப்பதற்கு இன்னும் ஒரே ஒரு திசைதான் பாக்கி யிருக்கிறது!....''

'' எந்தத் திசையைச் சொல்லுகிறீர்கள்?'' என்று ஆயனர் கேட்டார்.

''கிழக்குத் திசையைத்தான் சொல்கிறேன்; கிழக்கே சமுத்திர ராஜனிடம் வேண்டுமானல் மகேந்திர பல்லவர் அடைக்கலம் புகலாம்!''



''சமுத்திரத்திலே விழுந்து சாகலாம் என்கிறீர்களா, அடிகளே! உங்களுடைய இருதயம் இப்படி ஈரப் பசையே இல்லாத பாலைவனமாக எப்போது ஆயிற்று?'' என்று ஆயனர் கோபக் குரலில் கூறினர்.

''ஓ! மகா ஸ்தபதியே! என்னை அவ்வளவு நீசக் குணம் உள்ளவன் என்று ஏன் தாங்கள் கருத வேண்டும்? பல்லவ குலம் கடல் தந்த குழந்தையிலிருந்து தோன்றியதாயிற்றே? இப்போது அந்த வம்சத்துக்கு ஆபத்து வந்திருக்கும் சமயத்தில் அந்தக் கடல் அடைக்கலம் தராதா என்று சொன்னேன். கடலில் அடைக்கலம் என்ருல் கடலில் முழுகி விடுதல் என்றுதான் பொருளா? கப்பல் ஏறி இலங்கைக்குப் போய்த் தப்பலாம் அல்லவா? ஆனல் அதற்கும் ஓர் ஆபத்து இருக்கிறது. இலங்கையில் இப்போது உள்ள அரசன் மகேந்திர பல்லவனின் அருமைச் சிநேகிதன்தான். ஆனல், அவனை இலங்கைச் சிம்மாசனத்திலிருந்து தள்ளிவிட ஒரு பெருங் கலகம் அங்கே நடக்கிறதாம், பாவம்! பல்லவர்களுக்கு வந்திருக்கும் கஷ்ட காலம் அவர்களுடைய சிநேகிதர்களையும்கூடப் பீடிக்கிறது'' என்று கூறிவிட்டுப் புத்த பிக்ஷு ஒரு கோரச் சிரிப்புச் சிரித்தார்.

ஆயனர் அப்போதும் விட்டுக் கொடுக்காமல், ''எதற்காக மகேந்திர பல்லவர் இலங்கைக்கு ஓட வேண்டும்? காஞ்சிக் கோட்டை இருக்கிறதல்லவா?'' என்ருர்.

''ஆமாம்; காஞ்சிக் கோட்டை இருக்கிறது. அதில் எட்டு மாதங்களுக்கு முன்பு பயங்கொள்ளிப் பல்லவன் ஒளிந்து கொண்டது போல் இப்போது அவனுடைய தந்தையும் ஒளிந்து கொள்ளலாம். வாதாபிப் படை வழி தங்காமல் வந்திருந்தால் கோட்டை ஒரு நொடியில் தகர்ந்து போயிருக்கும். இப்போது கோட்டை பலப்பட்டு விட்டது. ஆகையால், சில காலம் கோட்டைக்குள் பத்திரமாயிருக்கலாம். வாதாபிப் படை ஆறு மாதமாக வட பெண்ணைக் கரையில் என்ன செய்து கொண்டிருந்தது என்றுதான் தெரியவில்லை!'' என்ருர் புத்த பிக்ஷு.

இந்த வார்த்தைகள் எல்லாம் சிவகாமியின் செவிகளில் புண்ணில் கோல் இடுவது போல விழுந்தன.

'கடவுளே! நாக்கில் விஷமுள்ள இந்த நாகநந்தியின் கர்வத்தை அடக்க மாட்டாயா?' என்று வேண்டிக்கொண்டாள்.

புத்த பிக்ஷுவின் விஷயத்தில் சிவகாமியின் மனநிலை சஞ்சலமுள்ளதாக இருந்தது. அவரிடம் காரணமில்லாத அருவருப்பும், இன்னதென்று தெரியாத பயமும் அவள் மனத்தின் ஆழத்தில் குடி கொண்டிருந்தன. மாமல்லரைப் பற்றி அவர் கூறிய செய்திகளைக் கேட்ட பின் அவளுடைய அருவருப்பு அதிகமாயிற்று.

இன்னெரு பக்கம் புத்த பிக்ஷுவின் விசாலமான உலக அநுபவமும் ஆழ்ந்த கலை ஞானமும் அவரிடம் அவளுக்குப் பக்தியையும் மரியாதையையும் உண்டு பண்ணி யிருந்தன. மேலும், தூர தூர தேசங்களுக் கெல்லாம் சென்று அங்கங்கே மகா சபைகளில் நாட்டியம் ஆடி, 'பரத கண்டத்தின் ஒப்பற்ற நடன ராணி' என்று பெயரும் புகழும் பெறுவது பற்றி பிக்ஷு அடிக்கடி கூறி அவளுடைய உள்ளத்தில் இக் விஜயப் பகற்

அழகு முகம்
ஒவ்வொன்றுக்குள்ளும்
அழகு ரகசியம்
ஒன்று
ஒளிந்திருக்கிறது.

சலுகை—




லாக்டோ-காலமைன்

அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

டூபார்-இண்டர்ஃப்ரான் லிட்., தபால் பெட்டி எண் 6582, பம்பாய் 400 018

அவள் மென்மையானவள்... அவள் ஒரு புதிர்...
அவள் மிருதுவானவள், உறுதியானவள்...
தீப்போன்றவள்... அவள் பெண்மையே உருவானவள்...

பட்டுப் போன்ற டால்க்... அன்பைப்போல
மிருதுவானது. உங்கள் மேனியைத் தழுவி
அரவணைப்பது. உங்களை மோகன லாகிரியில்
ஆழ்த்தும் அருமையான புது நறுமணம்
கொண்டது. அதுவே வெய்ல் ஆ:ப் லவ்.
ஹேலோ மட்டுமே அளிப்பது. அதைத்
தாராளமாக மேனியெங்கும் தூவிக்
கொள்ளுங்கள். ஹேலோவிற்கெனவே
பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம்
நீண்ட நேரம் உங்களைத் தழுவி,
உங்களைச் சுற்றிலும் கமகமவென
வீசிக் கொண்டிருக்கும். வெய்ல்
ஆ:ப் லவ் உங்களை அலங்கரிக்-
கட்டும். ஹேலோ மட்டுமே
அளிக்கும் வாசமுள்ள
அன்புத்திரை அது.

ஹேலோ வெய்ல் ஆ:ப்
லவ் டால்க் வாசமுள்ள
அன்புத்திரை...
அன்பைப் போல
மிருதுவானது.

அவளுக்கு உகந்தது

# ஹேலோ

வெய்ல் ஆ:ப் லவ்
டால்க்




HT.G.I.TH (R)

கனவுகளை உண்டு பண்ணியிருந்தார். அதெல்லாம் அவருடைய உதவியினால் தான் சாத்தியமாகக் கூடும் என்பதும், உலகமறியாத சாதுவான தன் தந்தையினால் ஆகாது என்பதும் அவளுக்குத் தெரிந்திருந்தன. எனவே, புத்த பிக்ஷு விடம் தன் மனத்தில் குடிகொண்டிருந்த அருவருப்பைப் போக்கிக் கொண்டு அவரிடம் சிநேக பாவத்தை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்று அவள் முடிவு செய்திருந்தாள்.

ஆனாலும், புத்த பிக்ஷு பல்லவ குலத்தைப் பற்றியும் மாமல்லரைப் பற்றியும் அடிக்கடி கூறிய வசை மொழிகள் அவளுடைய சிநேக முயற்சிக்குக் குறுக்கே நின்று அருவருப்பை வளர்த்து வந்தன.

**வா**தாபிப் படை வட பெண்ணைக் கரையில் ஆறு மாதங்களாக இருந்தது பற்றிப் புத்த பிக்ஷு குறிப்பிட்டதும், சிவகாமி ஆத்திரமான குரலில், ''சுவாமி, வட பெண்ணைக்குப் போய் வாதாபிப் படைகளை நீங்களே கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வந்து விடுவீர்கள் போலிருக்கிறதே! பல்லவ குலத்தின் மேல் உங்களுக்கு என்ன அவ்வளவு கோபம்?'' என்று கேட்டாள். பிக்ஷு சாந்தமான குரலில், ''பல்லவ குலத்தின் மேல் எனக்கு என்னத்துக்கு அம்மா கோபம்? அவர்களுடைய கையாலாகாத் தனத்தினால் இப்போது நாம் நினைத்து வந்தபடி பிரயாணம் செய்ய முடியாமலிருக்கிறதே என்றுதான் வருத்தமாயிருக்கிறது. சிதம்பரத்துக்குப் போய் அங்கிருந்து கீழைச் சோழ நாட்டு ஸ்தலங்களைத் தரிசனம் செய்து கொண்டு நாகப்பட்டினத்தில் நடக்கப் போகும் மகா புத்த சங்கத்துக்கு உங்களை அழைத்துப் போவதாகச் சொன்னேனல்லவா? இப்போது பாண்டிய சைனியம் கீழைச் சோழ நாட்டில் படையெடுத்து வருவதாகத் தெரிகிறது. இப்படிப்பட்ட சமயத்தில் நாம் சோழ நாட்டுக்குப் போவது உசிதமா என்றுதான் யோசிக்கிறேன்'' என்று கூறினார்.

''பின்னே, நாம் என்னதான் செய்யலாம் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?'' என்று ஆயனர் கேட்டார்.

''கெடில நதிக் கரையில் ஓர் அமைதியான இடம் இருக்கிறது. தங்களுடைய சிற்ப வேலைகள் நடப்பதற்கும் அங்கே நிறைய வசதி உண்டு. குன்றுகளும், பாறைகளும் ஏராளமாக இருக்கின்றன. இந்த யுத்தக் குழப்பமெல்லாம் முடியும் வரையில் நீங்கள் அங்கே இருக்கலாமென்று நினைக்கிறேன்'' என்றார் பிக்ஷு.

பிக்ஷுவிடம் வர வரச் சந்தேகம் அதிகம் கொண்டு வந்த ஆயனர், ''போகப் போகப் பார்த்துக் கொள்ளலாம் சுவாமி!'' என்றார்.

**இ**ப்படியெல்லாம் அவர்களுக்குள் இரண்டு தினங்களாகச் சம்பாஷணை நடந்திருந்தபடியால், எதிரே படை வரும் சத்தம் கேட்டதும் ஒருவேளை படையெடுத்து வரும் பாண்டிய சைனியம்தானோ அது என்று ஆயனரும் சிவகாமியும் ஐயுற்றார்கள். ஆனால் முன்னணியில் பறந்த கொடியில் ரிஷபத்தைப் பார்த்ததும் பல்லவர் படை என்று எல்லோருக்கும் தெரிந்து விட்டது. படை வீரர்கள் எழுப்பிய கோஷங்கள் அதை உறுதிப் படுத்தின.

''வாதாபி அழிக!''

''தலைக்காடு வாழ்க!''

''புலிகேசிக்கு நாசம்!''



''துர்விநீதனுக்குத் துர் மரணம்!''— என்னும் கோஷங்களையும்,

''காஞ்சி வாழ்க!''

''மகேந்திர பல்லவர் வாழ்க!''

'' மாமல்லரின் வீரத் தோள்கள் வெல்க!'' என்ற முழக்கங்களையும் மாற்றி மாற்றி அந்த வீரர்கள் எழுப்பிக்கொண்டு கம்பீரமாக நடந்தார்கள்.

இந்தக் குரல் ஒலிகளுக்கு இடை இடையே பேரிகை முதலிய யுத்த வாத்தியங்கள் எட்டுத் திக்கும் எதிரொலி ஆர்த்தன.

மேற்படி கோஷங்கள் எழுந்தபோது மரத்தின் பின்னால் மறைந்திருந்த நாகநந்தியடிகளின் முகத்தை யாரும் பார்க்கவில்லை. பார்த்திருந்தால், படமெடுத்து ஆடும் நாக ஸர்ப்பத்தின் தீக்ஷண்யமான கண்களிலிருந்து தீப்பொறி கிளம்புவது போல் அவருடைய கண்களிலிருந்தும் பொறி கிளம்பிக் கொண்டிருந்ததைக் கவனித்திருக்கலாம்.

## சிவகாமியின் சபதம்: ஒரு விளக்கம்!

கல்கியில் முதலில் தொடர்ந்து வெளியான சிவகாமியின் சபதத்தைத் தொகுத்துப் புத்தகமாகப் 'பைண்டு' செய்து வைத்திருப்பவர்கள் ஏராளமாய் இருக்கிறார்கள். அதனைத் திரும்பத் திரும்பப் படித்து ஆனந்தித்து வந்திருக்கிறார்கள். பல பகுதிகள் இவர்களுக்கு மனப் பாடம் கூட ஆகியுள்ளன!

இவர்கள் இப்போது இரண்டாம் முறையாக 'சிவகாமியின் சபதம்' தொடர்ந்து கல்கியில் வெளிவரும்போது சிற்சில இடங்கள் குறைக்கப் பட்டுள்ளதையும் ஒரு சில வார்த்தைகள் மாறி இருப்பதையும் உணர்கிறார்கள். உடனே கல்கி ஆசிரியர் குழாத்தினர்தாம் இந்த உரிமையை எடுத்துக் கொண்டு செயல்பட்டிருப்பதாகக் கருதிக் கோபத்துடன் கடிதம் எழுதுகிறார்கள். அமரர் 'கல்கி'யின் கதையில் கைவைப்பதா என்கிற கோபம் இவர்களுக்கு! அவ்வளவு அன்பு, பக்தி அவரிடம்!

உண்மை என்னவென்றால் அமரர் 'கல்கி' அவர்களே 'சிவகாமியின் சபதம்' புத்தக உருவில் வெளிவருமுன் அதில் சில அவசியமான திருத்தங்கள் செய்தார்கள். சில இடங்களைக் குறைத்து மெருகேற்றினார்கள். இவ்வாறு 'கல்கி' அவர்களாலேயே செய்யப்பட்ட மாறுதல்களுடன் தற்போது 'சிவகாமியின் சபதம்' தொடர்ந்து கல்கியில் வெளிவந்து கொண்டிருக்கிறது. —ஆசிரியர்

படை சின்னப் படைதான்; நாற்பது ஐம்பது குதிரைகளும், இரண்டாயிரம் காலாட்களும் இருக்கலாம். எனவே, அரை நாழிகைக்குள் நம் பிரயாணிகள் நின்றிருந்த இடத்தைத் தாண்டிப் படை சென்றுவிட்டது.

சற்று முன் கலகலப்பாக இருந்த சாலையில் நிசப்தம் குடிகொண்டது; பெரிய நகரத்திலிருந்து திடீரென்று நிர்மானுஷ்யமான காட்டுக்குள் வந்து விட்டது போல் தோன்றியது.

**ப**டை வீரர்கள் எழுப்பிய கோஷங்களில் ''மாமல்லர் வாழ்க!'' ''மாமல்லரின் வீரத் தோள் வெல்க!'' என்னும் கோஷங்கள் சிவகாமியின் உள்ளத்தில் பெரும் கிளர்ச்சியை உண்டு பண்ணியிருந்தன. மாமல்லர் பயங்கொள்ளியாயிருந்தால் பல்லவ வீரர்கள் அவரைப் பற்றி இம்மாதிரி கோஷங்களைச் சொல்வார்களா?

''ஆயனரே! போகலாமா? அசோகபுரம் இன்னும் ஒரு நாழிகை தூரம் இருக்கிறது'' என்று நாகநந்தியின் குரல் கேட்டது.

''ஆகா! போகலாம்! சிவகாமி! வண்டியில் ஏறிக்கொள்! அத்தையையும் ஏறச் சொல்!'' என்றார் ஆயனர்.

சிவகாமி வண்டியில் ஏறுமலே, ''அப்பா! இந்தப் படை வீரர்கள் எங்கே போகிறார்கள்?'' என்று கேட்டாள்.

''எனக்குத் தெரியவில்லை அம்மா; பார்த்தால் யுத்தத்துக்குப் போகும் படையாகத் தோன்றுகிறது. அந்த வீரர்களின் யுத்த கோஷங்களைக் கேட்ட போது எனக்குக் கூடக் கல்லுளியைப் போட்டுவிட்டுக் கத்தியை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று தோன்றியது. எதற்காக இப்படிப் பயந்து ஊரைவிட்டு ஓடுகிறோம் என்று வெட்கமாக இருக்கிறது'' என்றார் ஆயனர்.

''ஆயனரே! இத்தகைய சஞ்சலம் உமக்கு எப்போது வந்தது? சற்று முன்னால் அஹிம்சா மூர்த்தியான புத்த பகவானிடம் உமது அபார பக்தியைத் தெரிவித்துக் கொண்டீரே!'' என்றார் புத்த பிக்ஷு.

அந்தச் சமயத்தில், சாலையில் படை மறைந்த திக்கிலிருந்து ஒரு தனி குதிரை வரும் சத்தம் 'டக்டக்' 'டக்டக்' என்று கேட்டது. வரவர அது சமீபித்து வந்தது.

வருகிறது யார் என்று தெரிந்து கொள்வதில் அவர்கள் எல்லாருக்குமே ஆவல் இருந்தபடியால் நின்ற இடத்திலேயே நின்றார்கள்.

குதிரை அவர்களுக்கு அருகில் வந்தது. குதிரையின் மேல் இருந்தது இன்னார் என்று தெரிய வந்தபோது ஆயனருக்கும் சிவகாமிக்கும் உண்டான வியப்புக்கு அளவேயில்லை.

ஏனெனில், குதிரை மேல் இருந்தவன் அவர்களுடைய அரண்ய வீட்டுக்குப் பரஞ்சோதி வந்த தினத்தில் அவர்களிடம் சொல்லிக் கொள்ளாமலேயே மாயமாக மறைந்த குண்டோதரன்தான்.

''குருவே! நான் என்ன தவறு செய்தேன்! என்னை இப்படி அநாதையாகக் கைவிட்டு விட்டுச் சொல்லாமல் புறப்பட்டு வந்து விட்டீர்களே!'' என்று அலறினான் குண்டோதரன். (தொடரும்)



# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை!
இளமைப் பூங்காவில் பூரிப்புடன்
பூத்துக் குலுங்கும் இந்த
இளமங்கை, அழகு
ராணியாகத் திகழ்கிறாள். அந்த
புத்தெழில் என்றுமே நிலைத்திட
அவள் ஜெய் அழகு சாதன சோப்
உபயோகிக்கிறாள். மல்லிகை மணம்
வீசும் ஜெய் சோப் மேனியை
மிருதுவாக்கி, பொன்னொளி
வீசச் செய்கிறது.

மல்லிகை
மணம் கமழும்

**ஜெய்**

அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7002 TM

"


# பேகிங் பவுடர்

# உபயோகித்து, மென்மையாக சுவைபடத் தயாரிக்கப்பட்ட கேக்குகளை என் தேநீர் விருந்துகளில் அனைவருமே விரும்புகின்றனர்"



என்கிறர் திருமதி கலோசனு ராவ்,
'ஹரி நிவாஸ்', 95, மர்ராடப்பள்ளி, சிகந்தராபாத், ஆந்திர பிரதேஷ்.

கார்ன் ப்ராடக்ட்ஸ்
தேர்ந்தெடுத்த
பரிசு – பெற்ற
பக்குவ முறை

## முட்டை கலவாத 'சாக்கலேட்' கேக்

தயாரிக்க உதவுவது
ரெக்ஸ்
பேகிங் பவுடர்






கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப் ஜாமூன் ஆகியவற்றை சுவைபட அதி மென்மையாகத் தயாரிக்க மிகவும் உதவுகிறது, ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவே சிறப்பாகச் செய்து முடிக்கிறது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப்பட்டிருப்பதால், பேகிங் பவுடர்களில் மிகவும் சிறந்தது ரெக்ஸ் பேகிங் பவுடர்.

**பக்குவ முறை:**

2 கோப்பை மைதா
3 தேக்கரண்டி (தலைதட்டிய அளவு) ரெக்ஸ் பேகிங் பவுடர்.
1 கோப்பை சர்க்கரை
½ கோப்பை வெண்ணெய்
1 கோப்பை பால்
4 மேசைக்கரண்டி (தலைதட்டிய அளவு) கோகோ.
½ தேக்கரண்டி உப்பு.
1 தேக்கரண்டி வனில்லா எஸ்ஸென்ஸ்.
½ கோப்பை துருவிய தேங்காய்.
½ கோப்பை பொடியாக நறுக்கிய அக்ரோட்டு.

1. மைதா, உப்பு மற்றும் ரெக்ஸ் பேகிங் பவுடரை ஒன்றாகச் சேர்த்து சலித்து எடுக்கவும். வெண்ணெயையும் சர்க்கரையையும் விழுதுபோல் ஆக்கவும். கோகோவை சூடான சிறிது பாலுடன் கலந்து; விழுதாக்கிய வெண்ணெ-சர்க்கரையுடன் சேர்க்கவும். நன்றாகக் கிளறவும்.
2. துருவிய தேங்காயை ஒரு தேக்கரண்டி நெய்யில் பொன்னிறமாகும் வரை வறுத்து எடுக்கவும். தயாரிக்கப்பட்டுள்ள மைதா, பேகிங் பவுடர், வெண்ணெ முதலிய கலவையுடன் தேங்காயை சேர்க்கவும். நன்றாகக் கிளறவும்.
3. அத்துடன் ½ கோப்பை நறுக்கிய அக்ரோட்டையும் வனில்லா எஸ்ஸென்ஸையும் சேர்க்கவும். நன்றாகக் கலக்கவும். அதை நெய் தடவிய சிறு அச்சுகளில் ஊற்றவும். மிஞ்சியுள்ள அக்ரோட்டால் அதை அலங்கரிக்கவும். அடுப்பில் வைத்து 12-15 நிமிடங்கள் வரை வாட்டவும்.

OBM—1949 TM

**உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்.**



கார்ன் பிராடக்ட்ஸ் கோ,
(இந்தியா) பிரைவேட் லிட்.
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ்,
எச். ஸோமானி மார்க், பம்பாய் 400001

# தாய்

மனிதன் கடவுளை நேருக்கு நேராகப் பார்க்க முடியாது. ஆனால் அதற்குப் பதிலாகத்தான் ஒவ்வொருவருக்கும் தாய் இருக்கிறாள் என்னும் உண்மையை விளக்குவதற்காக, பாபு மூவீஸார், படாதபாடுபட்டிருக்கின்றனர்; சினிமா ரசிகர்களையும் படாதபாடு படுத்திவிட்டனர். சூதாட்டமும், குடியும் ஒருவனை ஆட்கொண்டுவிட்டால், அவன் என்ன பாடுபடுவான் என்பதையும் விளக்கமாகக் காட்டியிருக்கின்றனர். தந்தையை அறியாத தனயன், தனயனை அறியாத தந்தை இருவரையும் சந்திக்கிறோம். பழைய காலத்தையொட்டிப் பொருமைப்படும் வில்லனையும் சந்திக்கிறோம். யாரும் சாகவில்லை! பிரிந்தவர் கடைசியில் ஒன்று சேருகின்றனர்—எல்லாம் நமக்குப் பல முறையும் பழகிப் போன பாணியில்தான்! சுபம், சுபம் !

பட்டிக்காட்டு ஆனந்தனாக வரும் சிவாஜி கணேசன் நடிப்பில் யாரையும் மிஞ்சி நிற்கிறார்; கோபத்தில் சீறுவதும், முரட்டுத்தனமாகப் பாய்வதும், தாய் சொல்லுக்குக் கட்டுப்படுவதும், காதலியுடன் கோணங்கி நடனங்கள் ஆடுவதும், 'டிஷ்யூம்' 'டிஷ்யூம்' என்று சண்டை போடுவதும், கண்ணீரில் கரைவதும் அவருக்குக் கைவந்த கலையாயிற்றே! நடிப்பில் பூரண மன நிறைவைத் தருகிறார்.

ஜெயலலிதா பட்டிக்காட்டுப் பெண். நன்றாய் நடித்திருக்கிறார். பட்டிக்காட்டுத்தனமாக ஆனந்தனிடம் முறைப்பதும், கொஞ்சுவதும், சிணுங்குவதும் — சபாஷ், ஜெயலலிதா ! விருப்பம் இல்லாமல் வில்லனுடன் மணம் பேசும்போது சீறிய சீற்றம் பிரமாதம்! கலைச் செல்வியாயிற்றே! நடனமும் ஆடியிருக்கிறார்.

எஸ். வரலட்சுமி வாழ்க்கையோடு போராடி வெற்றி பெற்ற தாய். நடிப்பிலும் வெற்றி பெற்றிருக்கிறார். மேஜர் சுந்தரராஜன், கொண்ட மனைவியைக் கைவிட்ட தந்தை. ஆனாலும் நல்ல நடிப்பை எத்தருணத்திலும் கைவிட்டுவிடவில்லை. மலையாளம் 'பரையும்' டீக்கடைப் பாப்பம்மா சின்ன பாத்திரமானாலும் கவர்ந்துவிடுகிறாள். தத்ரூபமான நடிப்புக்கு மனோரமா நமது பாராட்டைப் பெறுகிறார். வில்லன் நம்பியார் நாம் பல முறை பல தமிழ்ப் படங்களில் பார்த்துப் பார்த்துப் பழகிப் போன பாத்திரத்தில்தான் தோன்றுகிறார். கிராமத்து மைனராக வரும் எம். ஆர். ஆர். வாசுவும், வி. கே. ராமசாமியும் படத்தின் நகைச்சுவைக்கு நாயகமாக விளங்குகின்றனர். அனைத்து ரசங்களையும் ஒருங்கே கொண்ட இப்படத்தில் கவர்ச்சி நடனம் இல்லை என்று யாரையும் குறைப்பட வைக்கவில்லை. ஏ. சகுந்தலா, ஆலம் இருவரும் படுகவர்ச்சியாக வந்து படுமட்டமாக ஆடுகிறார்கள்.

கதைக்காக எம். எஸ். சோலைமலையைப் பாராட்ட எதுவும் இல்லாவிட்டாலும், வசனம் அவரைப் பாராட்ட வைக்கிறது. டி. யோகானந்தின் டைரக்ஷன் பாராட்டுப் பெறுகிறது. ஒளிப்பதிவு நன்றாயிருக்கிறது. நாம் கேட்கவே அஞ்சும் வகையில் 'அஞ்சு' பாடல்கள் இருக்கின்றன.

இந்த விமர்சனத்தில் பாராட்டப்பட்ட அம்சங்கள் எல்லாம் விழலுக்கு (கதை) இறைத்த நீராயிருக்கின்றன. —காந்தன்






**க**ல்யாணம் நிச்சயமாகி, முகூர்த்தத்துக்கும் நாள் குறித்தாகிவிட்டது. வீட்டில் எல்லோரிடமும் ஓர் இன்பப் பரபரப்பு. வைதேகி மிக அதிர்ஷ்டசாலிதான். அவளுக்குக் கிடைக்கப் போகிற ஆனந்த வாழ்வு சாதாரணமானதா? எல்லாம் அவள் தாத்தா செய்யும் பூஜா பலன் என வந்தவர்கள் வாய் ஓயாமல் கூறிவிட்டுத்தான் சென்றனர்.

பெரியவர் வாய் திறக்கவில்லை. 'எல்லாம் அம்பிகையின் அருள். ஏதோ நன்றாக இருந்தால் சரிதான்' எனத் தம் மேல் எந்த பெருமையையும் ஏற்றுக் கொள்ளாமல் கூறிவிட்டார்.

'' குழந்தே ! ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள். இந்தப் பூலோகத்தில் எந்தப் பக்கத்தில் இருந்தாலும் சரி. உனக்கு நேரம் கிடைக்கும் பொழுது விளக்கை ஏற்றி வைத்து லலிதா சகஸ்ரநாமம் சொல்லிவிடு '' எனச் சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுதெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார் தாத்தா.

ஊர்க்காரர்கள் சொல்வதிலும், பிரமிப்பதிலும் பொருள் இருக்கிறது. அமெரிக்காவில் பெரிய பதவியில் இருக்கும், ரகுவை மணப்பதென்றால் சாதாரணமா ?

டாக்டர் ரகுராமனுக்குப் பல பணக்காரர்கள் போட்டி போட்டுக் கொண்டு பெண் கொடுக்கிறேன் என முன் வந்தார்கள். வைதேகிக்குத்தான் அவரை மணக்கும் அதிர்ஷ்டம் இருந்தது. வைதேகியின் தாத்தாதான் பேசினார். வைதேகியின் தகப்பனாரைக்கூட இவ்விஷயத்தில் தலையிட அவர் விடவில்லை. வைதேகியைப் பார்த்ததுமே அநாவசிய காலதாமதம் செய்யாமல் தம் சம்மதத்தைத் தெரிவித்துவிட்டார் ரகு. அவர் தந்தையோ, திருமணம் வைதிகச் சம்பிரதாயத்துக்குச் சிறிதும் மாறுபடாமல் நடக்க வேண்டும் எனக் கட்டளை போட்டாரே தவிர, வேறு எதையுமே கேட்கவில்லை.

இந்தக் காலத்தில், அதுவும் அரைக் காசு சம்பாதிப்பதற்குள் ஆயிரம் அமர்க்களம் செய்யும் காலத்தில் இப்படியும் ஓர் இடமா என்று அந்தக் குடும்பத்தினர் வியந்தனர்.

மற்றவர்களைப் போல் பல விஷயங்களைக் கற்பனை செய்ய வைதேகிக்குத் தெரியாவிட்டாலும், சில விஷயங்களைப் பற்றி நினைக்கையில் திருமணம் தன்னைப் பொறுத்தவரையில் ஒரு பெரிய விடுதலையாகவே இருக்கும்போல் அவளுக்குத் தோன்றியது.

இந்த வீட்டில், தாத்தா அவளைச் சினிமாவுக்குச் சிநேகிதிகளுடன் போக அனுமதிக்க மாட்டார். மிகவும் நாகரிகமாக உடுத்தவோ, பழகவோ அனுமதி கிடையாது. ரேடியோவில்கூட விருப்பத்துக்குத் திரைப்பட இசை கேட்க முடியாது.

தாத்தாவின் இத்தகைய கட்டுதிட்டங்கள் எல்லாம் வைதேகிக்கு வெளியில் சொல்லிக் கொள்ள முடியாத கட்டுப்பாடுகளாகத்தான் தோன்றின. அவளுடைய தோழிகளெல்லாம் நவநாகரிக மோஸ்தர்களில் உடை உடுத்துகையில் அவள் மட்டும் அதிகம் கவர்ச்சியில்லாத வகையிலேயே உடுத்திக் கொண்டிருந்தாள். செல்வத்திலும், நவநாகரிகத்திலும் மிகவும் உயர்ந்த நாடான அமெரிக்காவுக்குப் போவோம் என்று வைதேகி கனவில்கூட எண்ணிப் பார்த்ததில்லை.

வைர மூக்குத்தி வந்தது. அகல ஜரிகைக் கரை போட்ட புடவைகள் வந்தன. ஜிமிக்கி, நெக்லஸ் எனச் செய்து வந்த நகைகளைப் பார்த்தபோது வைதேகி தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

அவ்வளவு நாகரிகமான சூழ்நிலையில், அத்தனை பெரும் பதவி வகிப்பவர் தம் மனைவி நகைதாங்கி போல் இவ்வளவு நகைகளையும் மாட்டிக் கொள்வதையா விரும்புவார் ? இந்தப் பாணி நகைகளை அவர் மியூஸியத்தில் இருக்கும் பொருள்களாக அல்லவா நினைப்பார் என்று எண்ணி நாணினாள்; நம் மனிதர்கள் ஏன்தான் இன்னும் இதே பழைய பாணியிலேயே இருக்கிறார்களோ என்றும் கசந்து கொண்டாள்.

அவளுக்கு எத்தனையோ நாட்களாக இளம் சிவப்பு நிறப் பவுடர் பூசிக் கொண்டு, கோவைப் பழம் போன்ற லிப்ஸ்டிக் உதட்டை அலங்கரிக்க, நெற்றியில் ஜிகினா பொட்டு மின்ன, கறுப்புக் கண்ணாடி அணிந்துகொண்டு ஒயிலாக ஆங்கில சினிமாக்களுக்குப் போக வேண்டும்; கலகலவென்று நகைத்து ஆங்கிலத்தில் பொழிய வேண்டும் என்றெல்லாம் ஆசை. ஆனால் அவள் தாத்தா அதற்கெல்லாம் விட்டுவிடுவாரா ? கல்வியறிவுக்காக பி. ஏ. படிக்க வைத்தாரே தவிர, அந்தப் போர்வையில் துளசி பூஜை செய்யாமல் இருக்க முடியாது. அநாவசிய 'ஷோ' போடவும் முடியாது. 'எதற்காக வெய்யிலில் போக வேண்டும் ? வெயிலில் போனால்தானே கறுப்புக் கண்ணாடி வேண்டும் ?' என வாதிடுவார் தாத்தா.

பரவாயில்லை. இவ்வளவுக்கும் சேர்த்து ஒரு மாறுதல். உள்ளூராக இருந்தாலும் தாத்தா வந்து அவர் மனத்தையும் மாற்றி அவரையும் சனிக்கிழமை பஜனை செய்ய வைத்து விடுவாரோ என்று பயப்பட வேண்டும். இந்த விஷயத்தில் அந்தக் கவலையே இல்லை. 'தாத்தா அமெரிக்காவுக்கா இழுத்துக் கட்டிக் கொண்டு வரப் போகிறார்' என்று

நினைக்கும் பொழுது அவளையும் மீறிச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது.

படபடவென்று நாட்கள் பறந்தன. மளிகைச் சாமான்கள் எல்லாம் வீட்டில் குவிந்தன. உறவினர்களின் ஓயாத பேச்சுக் குரல்கள். வீட்டில் வருபவர்களும், காரியங்களும் பெருகின.

''வைதேகி! நீ மகா அதிர்ஷ்டக்காரி. அமெரிக்காவில் அந்தக் குபேர பட்டணத்தில் ஆனந்த வாழ்க்கை நடத்தும் பொழுது எங்களையும் மறக்காமல் நினைத்துக் கொள்ளடி'' என்றனர் தோழிகள்.

''அம்மா, நீதான் போறே, அமெரிக்காவுக்கு. மாப்பிள்ளைக்குத் தெரிந்த நம்ம ஊர்ப் பையன்கள் இருந்தால் உடனடியாகத் தெரியப்படுத்து. எங்க பெண்ணையும் உனக்குத் துணையாக அனுப்பி வைத்துவிடுகிறோம்'' எனக் கூறும் தோழியரின் அன்னைமார்கள் பேச்செல்லாம் அவள் காதில் விழுந்தது என்று சொல்ல முடியாது.

மேல் நாட்டவர் நாகரிகம், அவர்கள் விருப்பு, வெறுப்பு ஆகியவற்றை விளக்கும் புத்தகங்களை அண்ணன் தாத்தாவுக்கும், அப்பாவுக்கும் தெரியாமல் வாங்கி வந்து கொடுத்தான். அவைகளைக் கரைத்துக் குடித்தாள் ராஜேசுவரி. நாளைக்கு அமெரிக்காவில் அவர் தம் நண்பர்களிடம் அறிமுகப் படுத்துகையில் பட்டிக்காடு போல் நின்று அவர் மானத்தை வாங்கக் கூடாது என்பது அவள் குறிக்கோளாக இருந்தது.

வைதேகியின் திருமணம் மிகவும் சிறப்பாக நடந்தேறியது.

ரகுவின் ஆங்கில உச்சரிப்பும், நண்பர்களை வரவேற்பதும், பேசுவதும் அவளைப் பெரிதும் கவர்ந்தன. ஆயுள் முழுவதும் பழகினால்கூட அவனது திறமை தனக்கு வராது என்றே வைதேகிக்குத் தோன்றியது.

தன் தாத்தா வழிபடும் தேவியின் சந்நிதியில் நின்று கொண்டு, ''உன் கருணையே கருணை அம்மா! இவ்வளவு உயர்ந்த நிலை தந்தாயே!'' என்று மனம் உருகிப் பிரார்த்தித்தாள்.

பிறந்த மண்ணையும், தெரிந்த மனிதர்களையும், உறவினர்களையும் விட்டுப் பிரிவது வைதேகிக்கு என்னவோ போல் இருந்தது.

அமெரிக்க விமான நிலையத்தில் நண்பர்கள் கூட்டமாகக் கூடியிருந்தனர். புது முகங்களாயினும் நேசத்தோடு அவளை வரவேற்றனர்.

அவர்களுடைய பங்களாவுக்குள் நுழைந்ததும் முதலில் அவள் கண்ணில் பட்டது ஐந்து முகங்களும் ஏற்றிய குத்து விளக்குத்தான்! இந்திய முறைப்படி தயாரித்த விருந்தும், பாடல்களும், பஜனை கீதங்களும் அன்றைய பொழுதை வெகு வேகமாக நகரச் செய்து விட்டன.

ரகுவின் புத்தக அலமாரியின் முன் போய் நின்றவள் எத்தகைய புத்தகங்கள் இருக்கின்றன என்று ஆராய்ச்சி செய்ய விரும்புபவள் போல் பார்க்க ஆரம்பித்தாள்.

விவேகாநந்தரின் பொன் மொழிகள், ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள், கீதா சாரம், தேவி மகாத்மியம் ஆகிய புத்தகங்கள் அவளை அயரவே வைத்தன.

''வைதேகி!''

வெகு அருகில் குரல் கேட்கவே சட்டென்று திரும்பினாள் வைதேகி.



## ஒரு 'பட்ஜெட்' கவிதை



கடிதம் எதற்கு ? போன் எதற்கு ?
கட்டண உயர்வால் வருத்தமுற்றோம்
யோகம் புரிவோம் நியானிப்போம்
உற்றார், நண்பர் மனம்அறிவோம் !

பெட்ரோல் விலைகள் உயரட்டும்
ரயிலின் கட்டணம் ஏறட்டும்
பறக்கக் கற்போம் ஹடயோகம்
பயின்றால் காரும் ரயிலும் ஏன் ?

சவான், ஐயோ என்செய்வார் ?
சற்றும் கவலை கொளவேண்டாம்
மிச்சம் பிடிக்கும் 'யோகி'களை
விட்டா வைப்பார் வரும் ஆண்டில் !

- அ. ஆசிர்வாதம்

---

'' உனக்காக ஒரு பரிசு வைத்திருக்கிறேன். இவ்வளவு நேரமாகப் பலர் நடுவில் நாம் இருக்க வேண்டியிருந்ததால் கொடுக்க முடிய வில்லை. உனக்குப் பிடிக்கிறதா பார்!'' என்று கூறி ஒரு சிறிய வெல்வெட் பெட்டியை அவ ளிடம் கொடுத்தான் ரகுராமன்.

ஆவலோடு அதைப் பெற்றுக் கொண்டு திறந்து பார்த்தாள். அந்தப் பெட்டிக்குள் அழகிய வைர நத்து கண் சிமிட்டி மின்னிக் கொண்டிருந்தது.

'' இது..... இது நத்து அல்லவா !''

''ஆமாம், எப்படியிருக்கு ?''

கணவரையும் நத்தையும் மாறி மாறிப் பார்த்த வைதேகி. ''இதெல்லாம் இங்கு அணியலாமா ? இந்தியாவில்கூட நத்துப் போட்டுக் கொள்வது இப்பொழுது நாகரிகம் இல்லையே!'' என்றாள் சற்றுத் தயக்கத்தோடு.

'' இந்தியாவில் என்ன பண்ணுகிறார்கள் என்பது பற்றி எனக்குக் கவலை இல்லை, வைதேகி! வேற்று நாட்டில் வந்து குடித் தனம் செய்பவன் ஒவ்வொரு விநாடியும் மிகக் கவனமாகத் தன் நாட்டின் பண்பைக் கட்டிக் காக்க வேண்டும். இந்தக் கொள்கையினால் தான் இந்தியக் கலாச்சாரம் சற்றும் குறை யாமல் இருக்கும் குடும்பத்திலிருந்து பெண் எடுக்க வேண்டும் என்பதை முக்கிய குறிக் கோளாகக் கொண்டேன் நான். நாகரிகம் என்ற போர்வையில், நாட்டின் மணத்தையே அகற்றிக் காகிதப் பூவாகி விடுவதை நான் விரும்பவில்லை. நம் நாட்டைப் பற்றி இங் குள்ளவர்கள் நம்மைவிட அதிகமாகத் தெரிந்து வைத்துக் கொண்டுள்ளார்கள். அவர்கள் கேட்கும் கேள்விக்கு நீ சற்றும் சளைப்பில்லாமல் பதில் சொல்ல வேண்டும். உன்னுடைய உடை, அலங்காரம் எல்லாமே சரியான இந்திய முறைப்படிதான் இருக்க வேண்டும். நம் நாட்டு முறைப்படி செய்து கொள்ளும் அலங்காரம் பெண்களைத் தெய்வ மாகக் கருதி மரியாதையோடு நோக்க வைக் கும். அவளை ஒரு போகப் பொருளாகவோ, அல்லது பொழுது போக்குக்காகச் சீண்டவோ நினைக்க முடியாத தோற்றத்தைத் தரும். அந்த மாதிரி இருக்கும் பெண்ணை எல் லோருமே ஓரளவு மரியாதையோடுதான் நடத்துவார்கள்'' எனக் கூறிய ரகு அவளைக் கூர்ந்து கவனித்தான்.

வைதேகி இலேசாகத் தலையை நிமிர்த்திக் கணவனை நோக்கினாள்.

'' நம் வழக்கப்படி உடுத்தினாலும், நகை போட்டுக் கொண்டாலும் இங்கு இருப்ப வர்கள் சிரிக்கமாட்டார்களா ?'' எனத் தயக்கத்தோடு கேட்டாள், அவள் சந்தேகம் தீராதவளாக.

'' ஏன் சிரிக்கிறார்கள்? நமக்கு என்று ஒரு கொள்கையோ, பாணியோ இல்லாமல் எல்லாவற்றுக்கும் அப்படியே அவர்களைப் பின் பற்றினால்தான் நம்மை மதிக்கமாட்டார்கள். வெளிநாட்டில் இருப்பவர்கள் முதலில் தம் நாட்டுப் பழக்கங்களுக்கு மரியாதையோடு முக்கியத்துவம் கொடுத்துச் செயலாற்றினால் தான் கௌரவம் பெற முடியும். அமெரிக்க நண்பர்களோடு நாம் சரளமாகவும், இயல் பாகவும் பழகி இந்நாட்டின் பெருமைகளை நாம் உணர்ந்திருக்கிறோம் என்பதைக் காட்டிக் கொள்வோம். அதே சமயம் நமது பண்பாடு களையும் விட்டுக் கொடுக்காமல் கடைப்பிடிப் போம் !'' என்று ரகு உணர்ச்சி பொங்கக் கூறினான்.

அவன் அன்று கூறியதைச் செயலில் காட்டி னாள் வைதேகி. குங்குமப் பொட்டும், நத்தும் மூக்குத்தியும் அணிந்து அவள் நின்ற தோற் றம் ரகுவுக்கு ஆலயத்தில் அம்மன் சந்நிதியில் தேவியே தரிசனம் தருவது போல் இருந்தது.

வைதேகி, தாத்தாவை நினைத்துப் பெரு மிதம் கொண்டாள். அவர் செய்த பூஜா பலனுக்குத்தானே ரகு அவளுக்குக் கணவனாகக் கிடைத்தான் ! அவரது கண்டிப்பான வளர்ப்பு முறையினால்தானே அவள் நவ நாகரிகச் சுழலில் சிக்கிப் பாரதப் பண்பை விட்டு விலகிவிடாமல் இருந்தாள்! கடல் கடந்து பல ஆயிர மைல்களுக்கு அப்பாலும் கூடத் தாத்தாவின் உருவம் தோன்றி அவளை ஆசிர்வதிப்பது போல் இருந்தது.

செல்வி இந்திரா



தோற்றம் : 8-2-51 :: மறைவு : 26-2-74

கண்மணி! இந்திரா! உன்
கண்கவர் தோற்றம் எங்கே?
வெண்கலச் சிரிப்பும் எங்கே?
வெடிஒலிப் பேச்சும் எங்கே?
கண்களே குளமாய் நாங்கள்
கதறிடக் காலன் உன்றன்
இன்னுயிர் பறித்த துன்பம்
என்றுமே ஆறுதம்மா!

உன் அருமை அப்பா
புத்தனேரி ரா. சுப்பிரமணியம்
'தமிழ்க் குடில்', சென்னை - 18

## குழந்தைகளைக் கேளுங்கள் – நேர்த்தியான மிட்டாயைப்பற்றி




எந்தக் குழந்தையையும்
கேட்டுப்
பாருங்கள்

# நியூட்ரினைப்பற்றி

எந்த மிட்டாயாகத்தான்
இருக்கட்டுமே அல்லது டாப்பியாகட்டுமே—
நியூட்ரின் ஈடிணையற்றது.,
காப்பி டாப்பிகள், கோகோனட் பான் பான்கள்,
லாக்டோ பான் பான்கள்,
ஆரஞ்சு காண்டிகள்,
லாக்டோ நாவல்டீகள்.




திளைத்திளைக்க
திகட்டாத
மிட்டாய்!

நியூட்ரின் கன்ஃபெக்ஷனரி
கம்பெனி பிரைவேட் லிமிடெட்,
பலமனேர் ரோட்,
சித்தூர் (ஆ.பி.)

# விண்ணும் மண்ணும்





## கி.ராஜேந்திரன்

## 19. சந்தேக வித்து

தவிர்க்க முடியாத ஒரு கவலையால் தனஞ்செயன் ஒரு தடவைக்கு இரண்டு தடவையாக அந்த நீக்ரோவையும் கலப்புரத்தக்காரனையும் தலையை ஒடித்துப் பார்த்தான். கியூவில் தனக்குப் பின்னால் நிற்கும் தனஞ்செயன் திரும்பிப் பார்ப்பதை உணர்ந்த அனுபமா தானும் இயல்பாகத் திரும்பினாள். அடுத்த கணம் அவள் முகம் மலரக் கபடமில்லாது சிரித்து, ''ஹல்லோ! ஸோ வீ மீட் எகெய்ன்!'' என்று மகிழ்ச்சியோடு சொன்னாள்.

அந்த நீக்ரோவும் தொப்பியை உயர்த்திப் பெண்ணுக்குரிய மரியாதை செலுத்தி விட்டு வாயகலப் புன்னகை புரிந்தான். ''எஸ், யங் லேடி'' என்று தொடங்கித் தொடர்ந்து பேசினான்:

''இந்தப் பயணத்துக்கு உனக்குத்தானே நாங்கள் இருவரும் நன்றி சொல்ல வேண்டும்! இந்தியாவுக்கு நாங்கள் பயணப்பட நீ தானே காரணம்! பாம்பே, ஹியர் ஐ கம்!'' விடுமுறையில் கிளம்பும் சராசரி அமெரிக்க உல்லாசப் பயணி போலவே உற்சாகமாக மொழிந்தான் அவன்.

தனஞ்செயனுக்கு ஏற்பட்ட குழப்பம் நீங்குமாறு அடுத்த கணமே அனுபமா அவனுக்கு விளக்கினாள்: ''மைக்கேலும் நானும் டிக்கெட் வாங்க டி. டபிள்யூ. ஏ. அலுவலகத்துக்குச் சென்றிருந்தபோது இவர்களும் யதேச்சையாக அங்கே அதே சமயத்தில் வந்து சேர்ந்தார்கள். விடுமுறையில் எந்த நாட்டுக்குப் போகலாம் என்று அங்கே உள்ள உல்லாசப் பயணிகளுக்கான ஆலோசகருடன் விவாதிக்க ஆரம்பித்தார்கள். அவர் 'கிழக்கே ஸ்பெயினுக்கும் போங்கள்; அல்லது மேற்கே ஜப்பானுக்குச் செல்லுங்கள்' என்று யோசனை கூறி அங்கு இவர்களைக் கவரக் கூடிய சில காட்சிகளையும் வர்ணித்தார். மைக்கேல் பம்பாய்க்கு டிக்கட் வாங்கிக் கொண்டிருக்கையில் இவர்கள் பேச்சு என் கவனத்தை ஈர்த்தது. அன்றைக்கு இந்தியா செல்லப் போகிறோம் என்ற உற்சாகத்தில் நான் புடைவை உடுத்திப் புறப்பட்டிருந்தேன். என்னைப் பார்த்ததும், இவர், 'இந்தப் பெண் எந்த நாட்டைச் சேர்ந்தவள்?' என்று பயணிகள் ஆலோசகரை வினவினார். என் உடை அலங்காரத்தைக் கொண்டு உறுதி

யாகக் கூறுவதற்கில்லை என்றும் நான் இந்தியப் பெண்ணாகவோ அல்லது சிங்களப் பெண்ணாகவோ அல்லது பாகிஸ்தானியாகவோ அல்லது ஒருவேளை மலேஷிய மங்கையாகவோ கூட இருக்கலாம் என்றும் அந்த ஆலோசகர் பதிலளித்தார். இது என் காதில் விழுந்ததும் அவர் தடுமாற்றத்தைத் தவிர்க்க எண்ணி நானாகவே போய் 'நான் இந்தியப் பெண்' என்று கூறி அறிமுகம் செய்து கொண்டேன்.

'''அப்படியானால் விடுமுறையில் நாம் இந்தியாவுக்கே போவோம்' என்று இவர்கள் இருவரும் உடனே மகிழ்ச்சியுடன் தீர்மானித்து எங்கள் இருவருடனும் சேர்ந்து பம்பாய்க்கே டிக்கெட் வாங்கி விட்டார்கள். விடுமுறையில் எங்கே போவது என்று முடிவுக்கு வர முடியாமல் குழம்பிக் கொண்டிருந்தவர்களுக்கு வழிகாட்டிய தேவதையாகத் தென்பட்டேனும் நான்!'' அனுபமாவின் குரலில் பெருமிதம் எட்டிப் பார்த்தது.

''ஆமாம், அன்றைக்கு நீ அணிந்திருந்த உடையும் ஒரு தேவதைக்கு உகந்ததாய்த்தான் இருந்தது'' என்றான் அந்த நீக்ரோ. பிறகு தனஞ்செயனை நோக்கி, ''பிளீஸ்ட்டு மீட் யூ. ஐ ஆம் ஸ்மித், பால் ஸ்மித்!'' என்று தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொண்டு, பக்கத்திலிருந்த கலப்பு ரத்தக்காரனையும் அறிமுகப்படுத்தினான், ''ஜிம் கார்ட்டர்'' என்பதாக. பதிலுக்குத் தன் பெயரையும் முணுமுணுத்து வைத்து இருவருடனும் கைகுலுக்கினான் தனஞ்செயன்.

''அன்று புடைவை உடுத்திச் சென்றதில் உண்மையாகவே ரொம்பச் சந்தோஷப்பட்டேன் நான்'' என்றாள் அனுபமா. ''இந்தியாவின் அருமைகளை உணர இரண்டு அமெரிக்கர்களை அனுப்பி வைத்த பெருமை அந்தப் புடைவைக்கு உண்டு. இவர்களுக்கு ஆலோசனை வழங்கிக் கொண்டிருந்த அதிகாரிக்கும் தன் வேலை சுலபமானதில் ரொம்ப மகிழ்ச்சி. ஸ்பெயின் அல்லது ஜப்பானுக்கு டிக்கெட் வாங்குவதைவிட பம்பாய்க்கு டிக்கெட் எடுத்தால் கிரயம் கூடுதலாதலால் டி. டபிள் யூ. ஏ. நிறுவனத்துக்கும் லாபம். மொத்தத்தில் எல்லோருக்கும் திருப்தி!''

அனுபமா சுலபமாக ஏமாந்து விட்டிருக்கிறாள் என்பதாகத் தனஞ்செயனுக்குத் தோன்றியது. 'எதேச்சையாக இரு நீக்ரோக்களுக்கு ஒரு தீர்மானத்துக்கு வர உதவிய மிகச் சாதாரண நிகழ்ச்சியாக இதைப் பாவித்து இதுவரையில் தன்னிடம் இது பற்றிக் கூறாமலே கூட இருந்திருக்கிறாள். ஆனால் அவர்கள், அனுபமாவும் மைக்கேலும் டி. டபிள்யூ. ஏ. அலுவலகத்துக்குச் சென்றிருந்தபோது யதேச்சையாக அதே சமயத்தில் அங்கு வந்து சேர்ந்தவர்கள் அல்ல. அவர்களைச் சதா கண்காணித்துக் கொண்டிருந்து அவர்களைப் பின்தொடர்ந்து அங்கு வந்து சேர்ந்தவர்கள்! உல்லாசப் பயணம் புறப்படப் போகிறவர்களாக வேஷம் போட்டு இவர்கள் செல்லும் தேதி, விமானம் முதலியவற்றைத் தெரிந்து கொண்டு அதே தேதியில் அதே விமானத்தில் தாங்களும் அதே நகருக்குப் பயணப்பட டிக்கெட் வாங்கியிருக்க வேண்டும்.



'இவர்கள் யார்? எஃப். பி. ஐ. ஆசாமிகளா? நியூயார்க்கிலுள்ள பாகிஸ்தானிய அல்லது சீன ஐந்தாம்படையின் கைக்கூலிகளா ? எப்படிச் சொல்ல முடியும்? ஒருவேளை தன் ஊகம் தவறாயிருந்து இவர்கள் மெய்யாலும் உல்லாசப் பயணிகளாகவே கூட இருக்கலாம். அமெரிக்காவில் ஏழை நீக்ரோக்கள் மட்டும்தானா உண்டு? ஆண்டுக்கு இருமுறை உலகின் எந்த நாட்டுக்குப் போய்ப் பணத்தைக் கரைத்துப் பரவசமடையலாம் என்று யோசிக்கும் தகுதி பெற்ற பணக்காரக் கறுப்பர்களும் ஏராளம்தான்; மறுப்பதற்கில்லை.

'ஆயினும் தான் எல்லாவிதமாகவும் யோசித்துப் பார்க்க வேண்டும். அனுபமாவைப் போல் அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வரக் கூடாது. இவர்கள் ஒருவேளை பாகிஸ்தானிய அல்லது சீனக் கைக் கூலிகளாக இருந்தால்....? இப்போது எங்களுடன் ஒரே விமானத்தில் இவர்கள் ஏறுவதன் நோக்கம் என்னவாயிருக்கும் ....?

'சந்தேக மில்லாமல் 'ஹைஜாக்' முயற்சியாகத்தான் இருக்கும். பம்பாய் நோக்கிச் செல்ல வானில் விமானம் விரைந்து ஏறிய பின்னர், அட்லாண்டிக் கடல் மீதாகப் பறக்கும் போது, பைலட்டைப் பயமுறுத்தியும் பயணிகளை





**காரிகையும் காமிராவும்**

காரிகை தன் இரு கரங்களிலும் வைத்திருப்பவை உலகிலேயே மிகச் சிறிய டெலிவிஷன் காமிராக்கள்! இரண்டு அங்குலமோ அதற்கு அதிகமாகவோ விட்டமுள்ள குழாயினுள் செலுத்தப்பட்டால் அதிலுள்ள மயிரிழை விரிசல்களைக் கூடப் படம் பிடித்துக் காட்டிவிடக் கூடிய சக்தி படைத்தவை. நீருக்கு அடியில் நானூற்றி ஐம்பது அடி ஆழம் வரை சென்றும் படம் எடுக்கும்! இந்தக் காமிராவில் சுழலும் விசையும் பொருத்தப்பட்டிருப்பதால், நீருக்குள் இறக்கப்பட்டுள்ள குழாயின் எல்லாப் பக்கங்களையும், எல்லா மட்டங்களிலும் இது படமெடுத்துக் கொண்டிருக்கும்போதே உடனுக்குடன் படத்தை டெலிவிஷன் திரையிலும் பார்த்து ஏதேனும் விரிசல்கள் இருப்பின் கண்டு பிடிக்கலாம்! படம் பிடிக்கத் தேவையான ஒளியையும் இந்தக் காமிராக் கருவி தானே வழங்கிக் கொள்கிறது. அணைக்கட்டுக்கள், கொதிகலன் அமைப்புக்கள், அணுசக்தி நிலையங்கள் போன்றவை உருவாகும்போது பொறி இயல் வல்லுனர்களுக்குப் பேருதவியாக விளங்கும் இந்தக் காமிரா.

வண்ணப்படம் எடுக்கும் இது, சின்னஞ் சிறு காமிராவாக இருப்பினும் சாம்பல் நிறத்தில் மட்டும் பத்து விதமான நிற பேதங்களைக் காட்ட வல்லது! படத்திலே பெண்மணி தம் கண்ணையே படமெடுத்து அதனை டெலிவிஷன் திரையில் நாம் காணச் செய்கிறார்.

- பிரிட்டிஷ் தகவல் நிலையம்

---

அச்சுறுத்தியும் ஆட்டி வைப்பார்கள். விமானத்தைப் பீகிங்குக்கு அல்லது கராச்சிக்குக் கொண்டு போய் விடுவார்கள். இதன்மூலம் இந்த விஞ்ஞானிகள் இருவரும் இந்தியாவுக்கு உதவுவதைத் தடுக்கவும் முடியும். அதே சமயத்தில் இவர்களை பாகிஸ்தானுக்காகவோ அல்லது சீனாவுக்காகவோ பலவந்தப்படுத்தி உழைக்கச் செய்யவும் முடியும். இந்த இரட்டை இலாபத்துக்கு ஆசைப்பட்டே இவர்கள் செயல்படுகிறார்கள்!' - தனஞ்செயனின் சிந்தனை இப்படியெல்லாம் துரிதமாக இயங்கியது.

இதற்குள் அனுபமாவும் மைக்கேலும் பெட்டிகளை எடை போட்டு 'போர்டிங் பாஸ்' பெற்றுவிட்டார்கள். அவர்களுடைய பெட்டிகள்' கன்வேயர் பெல்ட்டு'களில் பயணப்பட்டுக் கொண்டிருந்தன. சுவரின் மறுபுறத்துக்கு ஒரு துவாரத்தின் வழியே செல்லும் அவை, எக்ஸ்ரே சாதனக் கண்களின் சோதனைகளுக்கு உள்ளாகி, கஸ்டம்ஸ் அதிகாரிகளின் கழுகுப் பார்வையில் ஓ. கே. பெற்று விமானத்தில் ஏறும். சந்தேகம் ஏற்பட்டால் திறந்து பார்க்க விமானத் தளப் பாதுகாப்பு அதிகாரிகளுக்கும் கஸ்டம்ஸ் அதிகாரிகளுக்கும் உரிமையும் உண்டு; விதம் விதமான சாவிகள் தொங்கும் கொத்துக்களும் அவர்கள் பாக்கெட்டுகளில் உண்டு.

''நெக்ஸ்ட்'' என்று அழைத்து, மேஜைக்குப் பின்னாலிருந்த அழகிய பெண்மணி தனஞ்செயனை நாசூக்காகத் துரிதப்படுத்தினாள். அவன் பெட்டியைத் தராசு பீடத்தின் மீது வைத்துவிட்டு, கோட்டின் உள் பாக்கெட்டிலிருந்து டிக்கெட்டை எடுத்து அந்தப் பெண்ணிடம் தந்தான்.

விமானத்தினுள்ளே நடைபாதைக்கு அருகில் அமைந்திருக்கும் ஓர் ஆசனம் தனக்குக் கிடைக்குமாறும் அதற்கு முன் வரிசையில் நடைபாதைக்கு அருகில் உள்ள இரு ஆசனங்கள் மைக்கேலுக்கும் அனுபமாவுக்கும் ஒதுக்கப்படுமாறும் பார்த்துக் கொண்டு அந்தப் படிக்கு விமானத்தில் ஏறுவதற்கான அனுமதிச் சீட்டு வாங்கிக் கொண்டான். இது விஷயம் கவனத்தில் இருக்க வேண்டும் என்று அனுபமாவுக்கு அவன் ஏற்கனவே சொல்லியிருந்ததால் இப்போது அவன் எண்ணியபடியே ஆசனங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. ஏதாவது ஓர் ஆபத்து என்றால் தானும் மைக்கேலும் நடைபாதையைச் சட்டென்று அடைய முடியும். வேறு பயணிகளைக் கடந்து தடுமாறிக் கொண்டிருக்க வேண்டியதில்லை.

தனக்குப் பின்னால் நின்ற நீக்ரோவும் கலப்பு ரத்தக்காரனும் பின்புறம் விமானப் பணிப் பெண்கள் அதிகமாக நடமாடும், பணியாற்றும் இடத்துக்கு அருகில் தங்களுக்கு ஆசனங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்று கேட்பது தனஞ்செயனின் காதில் விழுந்தது. இது குறித்து அவ்விருவரும் ஜோக் அடித்து இலேசாகச் சிரிப்பதும் டிக்கெட்டைப் பரிசோதித்த இளம் பெண் முகம் சிவக்கப் புன்னகை புரிவதும் தெரிந்தது.

உல்லாசப் பயணம் கிளம்புகிறவர்களின் இது போன்ற சிறு சிறு ஆசைகளை நிறைவேற்றி வைக்க விமானக் கம்பெனிகள் தயங்குவதில்லை. விமான உப



இந்தியன் ஏர்லைன்ஸ் உதவி கமர்ஷியல் மானேஜர் ஸ்ரீ எச். எஸ். மணி அவர்கள் குமாரத்தி செள. **கீதா** ('மாலா) B. Sc.க்கும், புதுவை ஸ்ரீ எஸ். சங்கரசுப்பிரமணியம் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **ஸ்தாணுசுப்பிரமணியம்** (செல்வமணி) B. Sc., B. Tech. அவர்களுக்கும் சென்னையில் திருமணம் நடைபெற்றது. நகரப் பிரமுகர்கள் பலரும் திருமணத்துக்கு நேரில் வந்து மணமக்களை வாழ்த்திச் சிறப்பித்தனர். **வாழ்க மணமக்கள்**



அகரமாங்குடி தர்மராஜனின் புதல்வி செல்வி **ராஜேசுவரியை** கல்கி அலுவலகத்தில் பணிபுரியும் செல்வன் **திரு மு. சிவசங்கரமூர்த்தி** சென்ற மாதம் 3ந் தேதி திருமணம் புரிந்து கொண்டார். அகரமாங்குடி மணமகள் இல்லத்தில் நடைபெற்ற திருமண வைபவத்துக்கு நண்பர்களும் உறவினர்களும் வந்து சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள்!

"பழமையான கரகரப்பான
பற்பொடிகள் உங்கள்
ஈறுகளுக்கும், பற்களுக்கும்
தீங்கு இழைக்கக்கூடும்..."



# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!




பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக் கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும்போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய் நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி நவீன பராமரிப்பு முறையில், உங்கள் பற்களையும் ஈறுகளையும் பாதுகாக்கிறது; மற்றும் வாய் நாற்றத்தையும் உடனே நிறுத்துகிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

**உங்கள் குடும்பத்திற்கு எகானமி சைஸ் கால்கேட் பற்பொடியை இன்றே வாங்குங்கள்! ஒரு டப்பா மாதக் கணக்கில் வரும்!**



...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் ப்ரஷ் உபயோகியுங்கள்.

TP.G.21 TM

சரணைப் பெண்மணிகளுக்கும் இதெல்லாம் அத்துப்படி. செல்லமாகத் தட்டப்படுவதும் கிள்ளப்படுவதும் பற்றப்படுவதும் அவர்களுக்கு வேதனைதான் என்றாலும் பயணிகளுக்கு இந்த அல்ப திருப்தியைத் தயங்காமல் அவர்கள் அளித்து விடுவார்கள். அளித்துவிட வேண்டும் என்பது எழுதப்படாத விதிமுறை! அளவுக்கு மீறிய தொந்தரவு என்று ஏற்பட்டாலொழிய விமான உபசரணைப் பெண்கள் இந்த அசட்டு ரோமியோக்களை எதிர்த்துக் கொள்ள மாட்டார்கள். ரகளை ஏற்பட வழிவகுக்க மாட்டார்கள். விமானக் கம்பெனிகளிடையே கடுமையான போட்டா போட்டி இருப்பதனால் உருவான ஒரு வேண்டாத விளைவு இது எனலாம்.

இவை யெல்லாம் தனஞ்செயனுக்குத் தெரியாதவையல்ல. இந்த இருவரும் கூடச் சராசரி அமெரிக்க உல்லாசப் பயணிகளைப் போல்தான் நடந்து கொள்ளுகிறார்கள் என்பதும் அவனுக்குப் புரிந்திருந்தது. என்றாலும்..... என்றாலும்.....

சந்தேக வித்து விழுந்துவிட்டது, தனஞ்செயன் உள்ளத்தில். ''கஸ்டம்ஸ் பரிசோதனைக்குப் போங்கள், இதோ நான் வருகிறேன்'' என்று மைக்கேலையும் அனுபமாவையும் அனுப்பிவிட்டு அவன் அங்கிருந்து விரைந்தான்.

அவன் மனம், 'விமானத் தளப் பாதுகாப்பு அதிகாரி தன் சந்தேகத்தைக்கேட்டுச் சிரிப்பாரா அல்லது செயல் படுவாரா?' என்று சிந்திக்க ஆரம்பித்தது.

## 20. பலமான பாதுகாப்பு

விமானத் தளத்தின் பிரதம பாதுகாப்பு அதிகாரியைத் தேடிப் பிடிப்பதோ, பேட்டி காண்பதோ, சிரமமாகவும் இல்லை, காலதாமதமாகவும் இல்லை. ஆனால் என்ன ஏமாற்றம்? தனஞ்செயன் எதிர்பார்த்த பரபரப்புடனும்வேகத்துடனும் அவர் இயங்குவதாய்க் காணோம்!

''ஃப்ளைட் 909 ஹைஜாக் செய்யப்படலாம் என்று நம்பக் காரணம் இருப்பதாகச் சொல்கிறாய். அந்தக் காரணங்கள் என்ன என்று கூறு. வலுவான காரணங்களாயின், உடனே நடவடிக்கை எடுக்கிறேன்'' என்றார்.

இதற்கு என்ன பதில் சொல்வது என்று தனஞ்செயனுக்குப் புரியவில்லை. 'யோசியாமல் பதற்றமடைந்து அவசரம் அவசரமாக இங்கு வந்ததே அசட்டுத்தனம்' என எண்ணத் தொடங்கினான். என்ன காரணம் என்று கூறுவது? 'நான் இந்தியப் பாதுகாப்பு



**பிடிக்கும் சிகரெட்டின் எண்ணிக்கை குறைய...**

இந்தியாவில் அமெரிக்கத் தூதராக இருந்த செஸ்டர் பௌல்ஸ், பிரதமர் நேருவுடன் நெருங்கிப் பழகியவர். ஒருமுறை இரண்டு பேரும் சந்தித்த பொழுது, நேரு சிகரெட் பற்றவைக்கத் தொடங்கினார். அது பாதி சிகரெட்டாக இருப்பதைப் பார்த்து செஸ்டர் பௌல்ஸ் ஆச்சரியப்பட்டார்.

''இப்படி இரண்டு துண்டாக ஆக்கிக் குடித்தால் அன்றாடம் பிடிக்கும் சிகரெட்டின் மொத்த எண்ணிக்கை குறைந்து விடுகிறது!'' என்றார் நேரு.

ஆதாரம்: செஸ்டர் பௌல்ஸ் எழுதிய ''நான் கண்ட இந்தியா''
தகவல்: அ. பிச்சை

---

அமைச்சகத்தின் துப்பறியும் பிரிவைச் சேர்ந்தவன். இரண்டு அமெரிக்க விஞ்ஞானிகளைக் கடத்திப் போகிறேன். அவர்கள் இந்தியாவுக்குச் செல்வதை எங்களது எதிரி நாட்டினர் விரும்பவில்லை. அதனால் இந்த விமானத்தை ஹைஜாக் செய்து சீனவுக்கோ அல்லது பாகிஸ்தானுக்கோ கொண்டு சென்றுவிடத் திட்டமிட்டிருக்கிறார்கள். ஸ்மித், கார்ட்டர் என்ற இருவரையும் சீன அல்லது பாகிஸ்தானியக் கைக்கூலிகள் எனக் கருதுகிறேன்' என்பதா? இப்படிச் சொன்னால் அது தன் தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டதாகாதா?

தனஞ்செயன் தடுமாற்றத்துடன் மௌனமாக நிற்பதைப் பார்த்துவிட்டு அந்த அதிகாரி சிரித்தார். ஆசனத்தை விட்டு எழுந்து வந்து அவன் தோளில் தட்டிக் கொடுத்தார். ''பரவாயில்லை, கவலைப்படாதே. இன்று இந்தக் காரியாலயத்தில் நுழைந்த முதல் விமானப் பயணி அல்ல நீ; ஆறாவது நபர்! சில நாட்களில் இருபது பேர் வரைகூட இப்படி ஹைஜாக் பிரமை கொண்டு இங்கே வருகிறார்கள்! சிலர் சொப்பனம் கண்டதாகக் கூறுகிறார்கள்; சிலருக்கு அசரீரி ஒலித்திருக்கும்; வேறுசிலரிடம் கடவுளே நேரடியாகப் பேசி ஹைஜாக் நடக்கப் போவதாகத் தெரிவித்திருப்பார்! இன்னும் சிலர் உன்னைப் போலவே ஒரு சக பிரயாணியைப் பார்த்ததுமே பிடிக்காமல் போய்ப் புகார் பண்ண வந்துவிடுகிறார்கள். டெலிஃபோனில் கூப்பிட்டு 'ஆபத்து! ஆபத்து!' என்று அலறுகிறவர்களுக்குக் கணக்கு வழக்கே இல்லை.



## ''நாற்காலிக்காக அலையாதீர்!''

தஞ்சையில் சுதந்திரக் கட்சியின் பூர்வாங்க மகாநாட்டுக்கு வருகை தந்த ராஜாஜி, மகாநாடு முடிந்ததும் அன்றிரவே சென்னைக்குத் திரும்ப ரயிலடிக்கு வந்தார். தஞ்சைக்கு இரவு போட் மெயில் 10-30 மணி அளவில் வந்தடையும். எந்த ஊருக்குப் புறப்பட்டாலும் கொஞ்ச நேரம் முன்னதாகவே ரயில்வே ஸ்டேஷனில் தயாராகக் காத்திருக்கும் பழக்கம் ராஜாஜிக்கு உண்டு. நம்மால் ரயில் தாமதமடையக் கூடாது என்ற கருத்தும் கவலையும் உண்டு.

சுதந்திரக் கட்சிப் பிரமுகர்களும் ஊழியர்களும் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருக்கும் முன்னாள் கவர்னர் ஜெனரல் அவர்களை உட்கார வைப்பதற்காக நாற்காலியைத் தேடி அங்குமிங்கும் அலைந்தனர், அவர்களைக் கவனித்துக் கொண்டே இருந்தார் மூதறிஞர்.

ஒருவாறாக ஒரு நாற்காலியைப் பெற்றுத் தலைவரை உட்கார வைத்தனர். உடனே ராஜாஜி தஞ்சை சுதந்திரக் கட்சியின் தற்போதைய தலைவர் திரு ஜி. சுவாமிநாதன் அவர்களிடம், ''நீங்களும் நமது கட்சியைச் சேர்ந்தவர்களும் நாற்காலியைத் தேடி அலையாதீர்கள்!'' என்று நயமாக இரு பொருள்படக் கூறிச் சுற்றி யிருந்தவர்களை மெய் சிலிர்க்க வைத்தார்.

கடந்த 3-2-74ல் தஞ்சையில் நடந்த ஒரு கூட்டத்தில் எம்.எல்.சி. திரு ஜி. சுவாமிநாதன் கூறியது.

தகவல்: ஜி-ஜி- ராதாகிருஷ்ணன்

---

இப்படியெல்லாம் அரண்டு மிரண்டு போகிறவர்களை ஏராளமாக நாங்கள் பார்த்துப் பழகி வந்த போதிலும் பாதுகாப்பு விஷயத்தில் சிறிதுகூட அலட்சியமாய் இருப்பதில்லை.'' இவ்வாறு ஆறுதலாகவே பேசிய அதிகாரி, ''அதோ பார்!'' என்று தமது மேஜைக்கு எதிரே இருந்த சுவரில் உயரத்தில் இருந்த பத்துப் பதினைந்து டெலிவிஷன் திரைகளைச் சுட்டிக்காட்டினார். ''இந்த விமான நிலையத்தில் மூலைக்கு மூலை டெலிவிஷன் காமிராக்கள் ஒளித்து வைக்கப்பட்டுள்ளன. பக்கத்து அறையில் இதேபோன்ற டெலிவிஷன் திரைகளை இரண்டு திரைகளுக்கு ஒரு நபர் வீதம் என் ஆட்கள் சதா பார்த்துக்கொண்டே இருக்கிறார்கள். சந்தேகாஸ்பதமான நபர்கள் அல்லது நடவடிக்கைகள் எதையாவது கண்டால் மறுகணமே நாங்கள் செயல்படுவோம். இது தவிரச் சாதாரணப் பயணிகளைப் போலவே எனது ஆட்கள் பலர் சதா வளைய வந்து, வருவோர் போவோரை நோட்டம் பார்த்தபடி இருக்கிறார்கள். பயணிகளின் பெட்டிகள், கைப் பைகள் மட்டுமின்றிப் பயணிகளே சோதனைக்குள்ளாகிறார்கள். அதிகாரிகள் அல்லது எக்ஸ்ரே கண்கள் மூலமாக இந்தச் சோதனைகள் நடக்கும். விமானத்தில் அனுப்பப்படும் பார்ஸல்கள், விமானத் தபாலில் வந்து சேரும் பாக்கெட்டுகள் போன்ற எதுவுமே விதிவிலக்கு அல்ல. இது தவிரப் பயணத்தை முடித்துக் கொண்டு வந்த விமானங்களையும் மேற்கொள்ளவிருக்கிற விமானங்களையும் கண்களாலும் விசேஷக் கருவிகளாலும் அலசி ஏதாவது 'டைம் பாம்'கள் ஒளித்து வைக்கப்பட்டுள்ளனவா எனப் பார்க்கிறோம். இவ்வளவு முன்னேற்பாடுகளுடன் நாங்கள் நடந்துகொள்ளும் போது நீ ஏன் கவலைப்படுகிறாய்? நிம்மதியாகத் தைரியமாகச் சென்று விமானத்தில் ஏறு. உனக்கு ஓர் ஆபத்தும் வராது!''

ஏதோ பீதி அடைந்து நரம்புத் தளர்ச்சியினால் அவதிப்படுகிறவனுக்குச் சமாதானம் சொல்வது போல் தனஞ்செயனுக்குத் தெம்பூட்டப் பேசினார் பிரதம அதிகாரி. தனஞ்செயனுக்கு வெட்கமாகப் போய்விட்டது. அவன் தனக்காகப் பயந்து கொண்டா இங்கே வந்து சேர்ந்தான்? என்றாலும் அவர் தம் கடமையின் எல்லைக்கு அதிகமாகவே கருத்துடன் செயல்படுகிறார் என்றும் சாட்சியமோ தக்க காரணமோ இன்றி இதற்கு அதிகமாக ஏதும் நடவடிக்கை எடுக்க அவரால் முடியாதென்றும் உணர்ந்தானாகையால் அவரைப் பாராட்டவே தோன்றியது. நன்றி கூறிக் கை குலுக்கி விடைபெற்றுக் கொண்டான்.

அவன் உருவம் மறைந்ததும் பிரதம அதிகாரி ஒரு புருவத்தை உயர்த்தி நெற்றியைச் சுருக்கிச் சில வினாடிகள் சிந்தித்தார். பிறகு டெலிஃபோனை எடுத்து, ''ஹாரி! ஃப்ளைட் 909ல் ஸ்மித், கார்ட்டர் என்று இருவர் பயணமாகிறார்கள். ஒருவன் கறுப்பு, மற்றொருவன் கலப்பு. கொஞ்சம் விசேஷக் கவனம் தேவை. எனக்குத் தகவல் சொல்கிறாயா?'' என்றார்.

அவர் கீழே வைத்த ஃபோனின் மணி ஐந்து நிமிஷங்களில் ஒலித்தது. ''அவர்களைப் பற்றிச் சந்தேகிக்கும்படியாக ஒன்றுமேயில்லை பாஸ்!'' என்றான் ஹாரி. ''ஃப்ளைட் 909 — இரண்டு ஒன்பதுகள்! ரொம்ப அதிர்ஷ்ட எண்!''

''தாங்க்யூ ஹாரி'' என்றார் அதிகாரி. ஒரு பெருமூச்சுடன் சிவப்பு பால் பாயிண்ட் பேனாவை எடுத்துக் கொண்டு எதிரே இருந்த ஃபைல்களைத் தாக்க ஆரம்பித்தார். (தொடரும்)



# நடை சாய நேர்ந்தாலும் நாடு நிமிர உழைத்தவர்!

நான்கு வயது வரையில் ஓடி விளையாடிய குழந்தைக்குத் திடீரென்று இளம்பிள்ளை வாதம் இரு கால்களையும் பாதித்தது. இடது கால் இரண்டு அங்குலம் சுருங்கியே விட்டது.

தமிழ் நாட்டிலேயே முதன் முதலாக மின்சார சிகிச்சையைச் சென்னையில் டாக்டர் யூ. ராமராவ்தான் தம் மருத்துவமனையில் ஆரம்பித்தாராம். அவரிடம் மூன்று மாத காலம் சிகிச்சை செய்து கொண்டான் பாலகன் மனோக்கியநாதன். பெற்றோரிடம் பணவசதி இல்லாததால் சிகிச்சையைத் தொடர முடியவில்லை.

சிகிச்சை நீடிக்கப்பட்டிருந்தால், திரு கே. எம். நாதன் இன்று மற்றவர்களைப் போல் நிற்கவும் நடக்கவும் முடிந்திருக்கலாம். இன்று, கரூர் ஜவஹர் பஜாரிலுள்ள காதி வஸ்திராலயத்தின் நிர்வாகியாக விளங்கும் அவரிடம், ''என்ன இருமல் தொல்லையால் மிகவும் அவதிப்படுகிறீர்களே?...'' என்று கேட்டேன்.

''பெல்லாரி சிறையிலிருந்தபோது ஆரம்பமான ஆஸ்த்துமா, என்னை இன்று வரையில் வாட்டிக் கொண்டிருக்கிறது!'' என்று பதில் கிடைத்தது.

தீவிர காங்கிரஸ் தொண்டராக இருந்த நாதன், ஆகஸ்ட் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்றார். அப்போது கும்பகோணத்தை அடுத்த விட்டலூர் கிராமத்தில் இருந்தார் அவர். கையில் 'ஹரிஜன்' பத்திரிகையுடன் நடக்கும்போது, போலீசார் கண்களில் தென்பட்டார். கைது செய்து லாக்கப்பில் வைத்தார்கள். அடித்து இம்சித்து, சத்யாக்கிரகம் செய்யவிருந்த தொண்டர்களையும், அவர்கள் இருப்பிடத்தையும் தெரிவிக்குமாறு விசாரித்தார்கள்.

மறுத்தார் நாதன்! வன்முறைப் புரட்சி, கலவரம் செய்த குற்றங்களுக்காக வழக்கு நடந்தது. இவரைத் தவிர வேறு நாற்பது பேரும் கைதாகிக் குற்றம் சாட்டப்பட்டார்கள்.

தேசிய உணர்வு கொண்ட குடந்தை வக்கீல்கள் ஆஜராகி, வாதாடினார்கள். பத்து மாதங்கள் வரை வழக்கு ஸ்பெஷல் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் நடந்தது. வழக்கின் தீர்ப்பு — பத்து ஆண்டுகள் சிறைத் தண்டனை — அனைவருக்கும்! ஆனால் நாட்டின் சுதந்திரம் நெருங்கும் போது 25–1–1945ல் விடுதலை பெற்று விட்டனர்.

பின்சாய்ந்து நடந்து செல்லும் மனிதராயினும், தேச சேவையையே லட்சியமாகக் கொண்டு முன்னேறிய நாதன், அதுவரை 'நமக்கு யார் பெண் கொடுக்கப் போகிறார்கள்' என்று அலட்சியமாக இருந்து விட்டார். ஆனால் உறவினர்கள் அவரைப் பிரம்மச்சாரியாக இருக்க விடவில்லை!

திருமணம் நடைபெற்றது. குணவதியாக வாழ்க்கைத் துணைவி அமைந்தார். குடும்பப் பொறுப்பு ஏற்பட்டதும் வேலை தேடினார். காதி வஸ்திராலயத்தில் சாதாரண ஊழியராகி, படிப்படியாக அங்கே கணக்குகள் எழுதுவதில் தேர்ச்சி யடைந்து, அதன் மூலம் கிளைகளின் கணக்குப் பரிசோதகராகவும் பிறகு வஸ்திராலய நிர்வாகியாகவும் ஆனார். கடந்த 1958 முதல் பதினைந்து ஆண்டுகளாக நிர்வாகியாக இருந்து வருகிறார்.

''உங்கள் வாழ்க்கையில் மறக்க முடியாத நிகழ்ச்சி என்ன?'' என்று அந்தத் தியாகியைக் கேட்டேன்.

''இந்திய சுதந்திரம் அடைந்த வெள்ளி விழாவை 1972ல் நாடெங்கும் அமோகமாகக் கொண்டாடினார்கள் அல்லவா? அப்போது பாரதப் பிரதமர் திருமதி இந்திரா காந்தி அவர்கள் தாமிரப் பத்திரம் அளித்தார்கள். பிரதமரிடமிருந்து விருது பெற்றவர்களில் அடியேனும் ஒருவன்!...'' என்று மிகுந்த மகிழ்ச்சியுடன் தெரிவித்தார், தேசபக்தர் திரு கே. எம். நாதன்.

''என்னைப் போன்று உடல் ஊனமுற்றிருந்தும் தேசத் தொண்டாற்றவும், சிறை செல்லவும் முன்வந்தவர்கள் பலர். கும்பகோணம் நகரில் தொண்டி சக்கரவர்த்தி ஐயங்கார் பெரிய தேசபக்தர். அவர் கூட்டங்களில் பேசாத நாளே இருக்காது...'' என்று நினைவுகூர்கிற திரு கே. எம். நாதனுக்கு இரண்டு பெண்களும், மூன்று பிள்ளைகளும் இருக்கிறார்கள்.

தந்தைக்கு நடக்க முடியாது போகும் சோர்வான நாட்களில் வீட்டிலிருந்து, காதி வஸ்திராலயத்துக்கு அவரைச் சைக்கிளின் பின்னால் அமர வைத்து அழைத்து வருகிறான், அவரது மூத்த புதல்வன்.

பேட்டி: ஏ. சுவாமிநாதன்

# ஆசைகள் மடிவதில்லை

10

கதை: கௌசிகன்

சித்திரம்: சூர்யா.





















அதே சமயம் பின்னால் ஒரு குரல்..
துப்பாக்கியைக் கீழே போட்டுக் கையை உயர்த்து....ம்..


சோம சுந்தரமல்லவா? இங்கே எப்படி வந்தான்? அப்படியானால்...


வெளியிலிருந்து சுட்டது இவனில்லையா? ஒரு வேளை சோமுவைக் குறி வைத்துத் தான் சுடப்பட்டதோ? மேனகா வைக் கொல்வதற்கான குறி இல்லையா அது?


...ஒரு வேளை சோமு உள்ளே நுழைவதைக் கண்டு தான் சுட்டவன் ஓடினானோ?..
சதீஷின் எண்ண ஓட்டத்தைத் தவிர அந்த அறையில் சில நிமிஷங்கள் நிசப்தமே நிலவியது.


மேனகா, சீக்கிரம். அவசிய மானவற்றை எடுத்துக்கொண்டு விமானப் பயணத்துக்குத் தயாராகக் கிளம்பு. எங்கே என்று கேட்காதே...ம் சீக்கிரம்...போ...


சோமுவின் துப்பாக்கி முனையோ, அவன் மேனகாவிற்கு ஆணையிட்டதோ சதீஷைப் பாதிக்கவில்லை. அவன் கவனமெல்லாம் மேஜை மீதிருந்த....
முரளியின் அறையில் கிடந்த நைலான் கயிற்றுக்கும் இதற்கும் தொடர்பு இருக்குமோ?
தொடரும்




# பொறுப்பு மிக்க 'சரக்கு மாஸ்டர்'

வயிற்றின் மேல் வலது புறத்திலே விதானத்தை ஒட்டிய பெரிய உறுப்பு கல்லீரல். கவிழ்ந்த முக்கோண வடிவாய்க் கருஞ் சிவப்பு நிறத்திலுள்ள இது வலது புறம் முழுவதும் பரவி ஓரளவு இடது வயிறுவரை துருத்திக் கொண்டிருக்கும். கெட்டியாகக் காணும் இது இதயத்தைப் போல் நான்கு மடங்கு எடையுள்ளது. இதயத்தின் அளவு முக்கியமானதும் கூட.

தூக்கணங் குருவியின் கூடு போல் கவிழ்ந்து காணும் இந்த உறுப்பின் நுழை வாயிலும் அடிப்புறம்தான்! இதற்கும், இரைப்பையிலிருந்து கிளம்பும் சிறு குடலின் மேல் பாகமான 'டியோடினம்' என்னும் பகுதிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.

கல்லீரல் ஓர் அடர்ந்த பஞ்சுவான உறுப்பு. ஒன்று பெரியதாகவும் ஒன்று சிறியதாகவும் இரண்டு மெத்தை உருண்டைகளை இணைத்தது போலக் காணும் இந்த உறுப்பில் எந்தப் பகுதியும் பூரணமானதுதான். கல்லீரல் என்னும் மொத்த உறுப்புக்கு உள்ள எல்லாப் பொறுப்புகளும் திறமைகளும் அதன் எந்தத் தனி உயிரணுவுக்கும் பூரணமாக இருக்கிறது! உயிரியல் விஞ்ஞானிகளின் மதிப்புக்கும், வியப்புக்கும், ஆராய்ச்சிக்கும் என்றும் உரியது இந்த உறுப்பு. முக்கால் பகுதிக்கு மேல் இந்த உறுப்பு சேதமானாலும் கூட, மீதம் இருக்கும் சிறு பகுதி, முழு உறுப்பின் மொத்தப் பணியை நிறைவேற்றும். அதோடு சேதமடைந்த பகுதியைப் பெரும்பாலும் புதுப்பித்துவிடும் திறமையும் அதற்கு உண்டு!

பெரும் பொறுப்பு வகிக்கிறது கல்லீரல். ஜீரணப் பக்குவத்துக்குத் தேவையான பொருள்களைச் சிறு குடலுக்கு அனுப்புவது இதுவே. சிறு குடலிலிருந்து உணவின் சத்துக்களைச் சுமந்து வரும் இரத்தம் கல்லீரலில்தான் அவற்றைக் கொண்டு வந்து சேமிக்கிறது.

உடல் ஒரு பெரிய ஹோட்டல்; அதில் ஒவ்வோர் உறுப்பும் ஒரு வாடிக்கையாளர். அவர்கள் ஒவ்வொருவர் ருசியும் தேவையும் தனித்தனி என்றால், இத்தனை பேர் தேவையையும் திருப்திப்படுத்தும் சரக்குமாஸ்டர் கல்லீரல்! எந்த எந்த உறுப்புக்கு எந்த எந்தச் சத்து எப்போது எவ்வளவு தேவையோ, அதுவும் எந்த மாதிரித் தேவையோ அப்படித் தயாரித்து, ரத்தத்தின் வழியே கொடுத்து

## ஆரோக்கியம் அழைக்கிறது

உண்ணும் உணவு ஜீரணமாகிறது என்கிறோம். ஜீரணமாவது என்றால் என்ன? உணவிலுள்ள சத்துக்கள் எல்லாம் உடலுக்குப் பயன்படும் சக்திப் பொருளாக மாறுவதேயாகும். இந்த இரசாயன மாற்றத்தில்

குடிப்பழக்கத்தினால் உடலின் எல்லா உறுப்புக்களுமே பாதிக்கப்படுகின்றன என்றாலும் முக்கியமாக அதிக அளவு சேதமடைவது கல்லீரலே.

○ ○ ○

வைரஸ் கிருமிகள்: இவற்றில் பலவிதம் உண்டு. இளம்பிள்ளை வாதத்துக்குக் காரணமாவதும் அம்மை தோற்றச் செய்வதும், ஜலதோஷம் பிடிக்கச் செய்வதும், மஞ்சள் காமாலையைப் பரப்புவதும் எல்லாம் வெவ்வேறு வகை வைரஸ்கள்தாம். இவை பாக்டீரியா கிருமிகளைவிடச் சிறியவை. எலக்ட்ரான் மைக்ரோஸ்கோப் உதவியால் சமீப காலத்தில் வைரஸ்களை ஆராய்ந்து வைத்திய உலகு பயன் அடைந்திருக்கிறது.



அனுப்புகிறது! இந்தச் சரக்குமாஸ்டர் தமது களஞ்சியம் வற்ருது பார்த்துக் கொள்கிருர். திடீர்த் தேவைகளுக்கு எப்போதும் தயாராக இருக்கிருர்.

உடல் நீண்ட நேரம் அதிகம் உழைக்க வேண்டி யிருக்கிற தென்ருலோ, பட்டினி கிடக்க நேர்ந்தாலோ, அல்லது ஏதாவது விபத்து ஏற்பட்டாலோ உடனே 'குளு கோஸ்' என்னும் சக்தியூட்டும் பொருள் அதிகம் தேவைப்படும். இது கல்லீரலில் இந்தத் திடீர்த் தேவைக்கு என்றே சேமித்து வைக்கப் பட்டிருக்கிறது.

நல்ல ரத்தம் ஊற அவசியமான பி-12 வைட்டமின் சத்து இங்கே சேமிப்பாகிறது; இரும்புச் சத்து சேகரமாவதும் இங்கேதான். ரத்தத்தின் முக்கிய சத்தான ஆல்புமின் தயாராவதும் இங்கேதான். உணவு ஜீரணமாகத் துணை புரியும் பித்த நீர் சுரப்பதும் இங்கிருந்துதான். சொல்லப் போனால் பித்தநீர் அல்லும் பகலும் சுரக்கிறது. குடலில் உணவு இருக்கும் போது நேரே அங்கு பாய்கிறது. மற்றப் பொழுதில் இந்த நீர் இறுக்கமான சாறு வடிவில் பித்த நீர்ப் பை என்னும் சிறு உறுப்பில் குடலருகே சேமிக்கப்படுகிறது. குடலில் புது உணவு சேரும்போதெல்லாம் பித்த நீர்ப்பை உணர்வு பெற்று, சுருங்கி, சாற்றைக் குடலில் கொண்டு கொட்டும்.

மற்றும் ஒரு முக்கிய பணியும் புரிகிறது கல்லீரல். அறிந்தோ அறியாமலோ எத்தனையோ விஷப் பொருள்கள் உணவில் சேர்ந்து விடுகின்றன. உடல் நோய்களைக் குணப் படுத்த என்று அருந்தும் பல மருந்துகளில்கூட விஷ அம்சங்கள் உள்ளன! இந்த விஷங்கள் உடலை எந்தவிதத்திலும் பாதிக்காமல் அவற்றின் விஷத் தன்மையை முறித்து விடுகிறது கல்லீரல். இதன் சக்தியையும் மீறிய அளவு விஷம் உள்ளே சென்ருல்தான் ஆபத்து.

இவ்வளவு முக்கிய உறுப்புக்குத் தொல்லை நேர்ந்தால் அது உடல் ஆரோக்கியத்தையே பாதிக்கிறது. ஏதாவது விபத்திலே கல்லீரல் அடிபட்டுப் பெரிதும் சேதமடைந்திருந்தால் சேதமடைந்த பகுதியை வெட்டி எடுத்து விட்டால்கூட மிச்சமிருக்கும் பகுதி முழுப் பணியும் ஆற்றுகிறது.

நோய்களிலே கல்லீரலைப் பாதிப்பது முக்கியமாக மஞ்சள் காமாலை. மிகையான பித்த நீர் ரத்தத்தில் சேர்ந்து உடலெங்கும் பரவுவதே இதன் அடையாளம். அபூர்வமாகச் சிலருக்குப் பிறவியிலிருந்தே இந்தக் குறை இருக்கிறது. மஞ்சள் காமாலை பெரும்பாலும் தொத்து வியாதியாகவே பரவுகிறது. இந்த நோயைப் பரப்பும் வைரஸ் விஷக் கிருமிகள் நீரிலோ, ஆகாரத்திலோ கலந்து உடலுக்குள் வந்துவிட்டால் குடலிலே கிடுகிடுவென்று இனம் பெருகி, கல்லீரலுக்குள் போனதும் நோய் தெரிகிறது. இவ்வாறு இனம் பெருகச் சுமார் நாற்பது நாட்கள் ஆகின்றன. வாந்தி, சுரம் என்று வந்த பிறகுதான் உடலிலே இத்தனை காலம் நோய்க்கிருமி இருந்தது தெரியும். நோய் அடையாளம் தெரிந்து சிகிச்சைக்கு வருபவர் இருபது முப்பது பேர் என்ருல், அந்த வட்டாரத்தில் காமாலை நோய்க் கிருமிகளுடன் வாழ்பவர் பல நூறு பேர் இருக்கலாம். யாருக்கும் தெரியாது.

இது பொதுநல சுகாதாரத் துறையினருக்கு ஒரு தீராத பிரச்னை.

இதற்குச் சிகிச்சை பட்டினியும் மருந்தும் அல்ல; தனிமையும், ஓய்வும், பசித்தபோது நன்கு புசிப்பதும்தான். சில நாட்களில் தானே குணம் தெரியும்.

மற்றும் ஒரு விசித்திர முறையிலும் மஞ்சள் காமாலை தொற்றுநோயாகப் பரவுகிறது. முன்னமே பார்த்தபடி நாற்பது நாட்கள் வரை நோய் அறிகுறி தெரியாமலே உள்ளுக்குள் நோய்க் கிருமிகள் குடியிருக்கும். அப்படிப்பட்ட எவருக்காவது ஏதாவது காரணத்துக்காக ஊசி போட்டால் அந்த ஊசி முனையில் நோய்க் கிருமிகள் தொற்றிக் கொண்டு விடலாம். கொதிக்கும் நீரிலும் உயிரை விடாத இவை அடுத்து ஊசி போட்டுக்கொள்ளும் ஓர் அப்பாவியின் உடலுக்குள் புகுந்து கொள்ளலாம்! ஆகாரத்துடன் உள்ளே வந்தால் தன்னை வெளிப்படுத்த நாற்பது நாட்கள் எடுத்துக்கொள்ளும் விஷக் கிருமி இரத்தத்தில் ஊசி வழியாக வரும்போது நூறு நாட்கள் வரைகூட மௌனமாக இருந்து விட்டு, பிறகு நோய் அடையாளத்தைக் காட்டும்.

ஊசியிலும் இரத்த தானத்திலும் இந்த ஆபத்துக்கு எப்போதும் வாய்ப்பு இருக்கிறது. நோயாளிகள் கேட்டால் கூட, தேவையிருந்தால் ஒழியப் பல வைத்தியர்கள் எடுத்ததும் ஊசி போட மாட்டார்கள். சிகிச்சை முறையே நோய் பரவக் காரணமாகலாமா?

கல்லீரலின் முக்கிய எதிரி குடிப் பழக்கம். குடித்தால் விரைவில் கேடுறும் கல்லீரல், அந்தப் பழக்கத்தை நிறுத்தியதும் சில நாட்களில் சரியாகிறது.

வைரஸ் கிருமியில் ஒருவகையை ஆராய்ந்து அதற்குத் தடுப்பு ஊசி தயாரிக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ள அறிஞர்.



கல்லீரலுக்கு வரும் ஒரு பெரிய நோய், 'மகோதரம்'. குடிப்பவருக்கு இது அதிகம் வருகிறது. கல்லீரல் திசுக்கள் அழுகிச் செத்து வாடி, சக்கையாய், செயலற்றுக் கடித்து உப்பிப் போவதே இந்த நோய். இது முற்றும் வரை வெளியே தெரிவதில்லையாதலால் சிகிச்சையால் குணப்படுத்த முடியாமல் போகிறது. குடிப் பழக்கத்தை விட்டொழித்து, புரதச் சத்து நிறைந்த உணவைப் புசிப்பது இந்நோய் வராமல் தடுக்க ஒரு வழி.

பொதுவாக, பசிக்கவில்லை; புசிக்கத் தோன்றவில்லை என்றாலே வயிற்று உறுப்புக்களில் ஏதாவது கோளாறு இருக்கிறது என்று சந்தேகப்பட வேண்டும். வைத்தியரை அணுக வேண்டும்.

கல்லீரலில் கட்டி வந்து, சீழ் சேர்வதும் உண்டு. இது சீதபேதி உண்டாக்கும் அமீபா விஷத்தால் ஏற்படுவது. குடலை அரித்து, இரத்தக் குழாயில் பயணமாகிக் கல்லீரலை அடைந்து அங்கே அமீபா தன் திருவிளையாடலைப் புரியத் தொடங்கியதும், கட்டி புறப்பட்டு, சீழ் வடிகிறது. கல்லீரலை அது அரித்துவிடும். இரண்டு மூன்று வாரங்களில் சோகை பிடித்துப் போவதும் அடிக்கடி குளிர் சுரம் வருவதும் வயிற்று வலியும் நோய் அடையாளங்கள். வைத்திய உதவியால் கட்டுப்படுத்தி, குணப்படுத்தலாம். அவசியமானபோது ரண சிகிச்சை செய்து சீழ் எடுப்பதும் உண்டு.

குழந்தைகளுக்கு வரும் சுரல் கட்டி இன்னும் ஆராய்ச்சி நிலையில் உள்ள ஒரு நோய். அடுத்தடுத்த குழந்தைகளுக்கு இந்தத் தொல்லை வருவதும் வயது ஏற ஏறக் குணமாகி, பிறகு இந்தத் தொல்லையிலிருந்து நிரந்தரமாக மீள்வதும் சகஜம். பித்தநீர் வெளியேறும் வழி அடைத்துக் கொள்வதால் நேரும் இடரோ என்பது ஒரு சந்தேகம்.

கல்லீரலை ஒட்டிய பித்தநீர்ப் பையில் இருந்து சாருக இறங்கும் பித்தநீர் சிலருக்கு இன்னும் இறுக்கமாகிச் சிறு சிறு கற்களாகிப் போவதும் உண்டு. இதனால் பித்தநீர்ச் சாறு ஊற வேண்டியபோதெல்லாம் சுருங்கும் பையில் இவை நசுங்கிப் பொறுக்க முடியாத வலி ஏற்படும். முற்றிப்போனால் ரண சிகிச்சை செய்து இந்தப் பையை நீக்கிவிடுவதும் உண்டு. பித்தநீர்ப் பை பயனுள்ள ஓர் உறுப்புத்தான். ஆயின், பிணியுற்ற துணையை விடத் துணையற்ற நிலையே மேலல்லவா?

கட்டுரை: **தம்பி சீனிவாசன்**

ஆலோசனை:

**டாக்டர் என். வைத்தியநாதன்**












# க்ளாக்ஸோ பேபி பவுடர்
# அன்னையின் அன்பென அணைக்கும்
# அதிமென்மை



**க்ளாக்ஸோ** மற்றும் 'பாப்பாவுக்குப் பயனுகும்' ப்டைப்புகளின் நம்பகமான பாரம்பரியத்தில் இன்னொன்று...




மென்மையின் உருவம்! ஏனெனில்
உங்கள் பாப்பாவும் மென்மையானது தானே!
அது அதிசன்னமாகத் தயாரிக்கப்பட்டிருப்பதால்,
நீராட்டிய பின்னரும், இடுப்புத் துணியை
மாற்றிய பின்னரும் உங்கள் பாப்பாவின்
பட்டு மேனியில் மென்மையைப் பொழிகின்றது.
உங்கள் நம்பிக்கைக்குகந்த அதே க்ளாக்ஸோவின்
தயாரிப்பு.

100 கிராம் மற்றும் 400 கிராம் டின்களில் கிடைக்கிறது.

**பெற்ற மனமறியும்—பிள்ளைக்**
**கனியமுதுக்குப் பேராதரவு—க்ளாக்ஸோ**

**க்ளாக்ஸோ**

CMGBT-4-203 TM

# வளரும் குழந்தைகளுக்கு இனிய போர்ன்விடா!

**சக்தி வளரட்டும்! பள்ளியிலும்... விளையாட்டிலும்!**

சக்தி வளரட்டும்! பள்ளியிலும் விளையாட்டிலும், இன்றும் என்றுமே வெற்றி அவனுக்கே. ஆம்! அவன் சுவைத்துப் பருகுவது போர்ன்விடா. ஊட்டமளிக்கும் **கோகோ,** பால், மால்ட், சர்க்கரை இவை இனிதே கலந்திட்ட போர்ன்விடாவிலே அடங்கியுள்ளது அவனுடைய ஒளிமிக்க எதிர்காலம்.

ஊட்டமளிக்கும் போர்ன்விடா ஒரு இன்சுவையுள்ள பானம். ஏனெனில் இதில் கோகோ உள்ளது.






*காட்பரிஸ்*
**போர்ன்விடா** சக்திக்கும் வலிமைக்கும் மற்றும் நீர்சுவைக்கும்

# பள்ளிப் படிப்பும் பரவசமாகலாம்!



குழந்தைகள் பல விஷயங்களைக் கிரகித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வமுடையவையாக இயல்பாகவே இருக்கின்றன. அவற்றின் மனப் பக்குவம் தெரியாமல் கற்றுக் கொடுக்கும் கல்வி முறைகள் இருப்பதனால்தான் 'ஐயோ! பள்ளிக்கூடம் போகணுமே!' என்று அழுகின்றன.

இக்கருத்தை மாண்டிஸோரி அம்மையார் போன்ற மேதைகள் உணர்ந்து விளையாட்டு மூலமாகக் கல்வி புகட்டும் முறையில் பல புதிய உத்திகளைக் கூறியிருக்கிறார்கள்.

அவற்றுக்கு உதவும் வகையில் திரு கோபிநாத்தும் திரு அமலோரும் தங்கள் பொறி இயல் அறிவினைப் பயன்படுத்திப் பல உபகரணங்களை யாத்திருக்கிறார்கள்.

ஒரு குழந்தைக்குக் கூட்டல், கழித்தல், பெருக்கல் முதலியவற்றைச் சொல்லிக் கொடுக்க எவ்வளவு எளிய முறையைக் கண்டுபிடித்திருக்கிறார்கள் தெரியுமா! அதுமட்டுமா? ஒரு மைதானத்தை அளக்க வேண்டுமானால் ஒரு சிறு குழந்தை விளையாட்டாகவே அளந்து சொல்லிவிடக் கூடிய ஓர் எளிய விளையாட்டுக் கருவியைப் படைத்திருக்கிறார்கள். இல்லை— இவர்கள் புதிதாகப் படைக்கவில்லை. பழைய விளையாட்டுக் கருவியைப் புதிய முறையில் கல்வி புகட்டப் பயன்படுத்த முடியும் என்பதைக் காண்பித்திருக்கிறார்கள்.

ஒரு சக்கரம். அதன் சுற்றளவு ஒரு மீட்டர். ஒரு சுற்று முழுக்கச் சக்கரம் சுற்றினால் 'டங்' என்று மணி அடிக்க ஒரு மணியை இணைத்திருக்கிறார்கள். சக்கரத்தை இயக்க ஒரு நீண்ட கைப்பிடி. அப்பிடியைப் பிடித்துக்கொண்டே சக்கரத்தைச் சுழற்றிக் கொண்டு எந்தக் குழந்தைதான் போக விரும்பாது! அப்படிப் போகும்போது 'டங் டங்' என்று மணி எத்தனை முறை அடிக்கிறதோ, அத்தனை மீட்டர் நிலத்தை அளந்ததாகக் கணக்கு வந்துவிடுகிறது.

இப்படி இவர்கள் செய்துள்ள உபகரணங்கள் ஒவ்வொன்றும் எளிமையானது. ஆனால் நற்பயன் அளிப்பது. தேர்ந்த சிந்தனையின் பயனாய் உருவானது.

இந்த இளம் நண்பர்கள் இதுவரையில் கிட்டத்தட்ட பதினைந்து உபகரணங்கள் வனைந்திருக்கின்றனர்.

கணிதத்தில் ''ஏ பிளஸ் பி ஹோல் ஸ்கொயர்ட்'' என்று தொடங்கும் ஒரு சூத்திரம் உண்டு. இதைக் குருட்டாம்போக்கில் மனப்பாடம் பண்ணி எழுதி மார்க் வாங்கியிருப்போம். இதற்கு இவர்கள் ஸ்தூல வடிவம் கொடுத்து அமைத்துள்ள உபகரணத்தைப் பார்க்கும்போது இந்த வாய்ப்பாட்டின் பொருள் பளிச்சென்று புரிகிறது. ''இவ்வளவு தானா, எவ்வளவு எளிமையாக இருக்கிறது!'' என்று எந்தச் சிறுவனும் புரிந்து கொள்ளுவான்.

இப்படி இவர்கள் செய்துள்ள ஒவ்வொரு உபகரணமும் அறிவுக்கு விருந்தாகவும், ஆனந்தபரவசப்படுத்துவதாகவும் இருக்கிறது.

இந்த இளைஞர்களின் அரிய திறமையை உணர்ந்து சென்னை குட்ஷெப்பர்டு கான்வென்டினர் இப்போதே தங்கள் குழந்தைகளுக்குப் போதிக்க இவர்களுடைய உபகரணங்களைப் பயன்படுத்தி வருகின்றனர்.

அரசாங்கம் கல்விப்பயிற்சிக்கு உதவக் கூடிய இவர்களுடைய பொருட்களை வாங்கவோ, தயாரிப்புக்கு உதவவோ, காலம் தாழ்த்தலாம். ஆனால் இன்று பெரிய நகரங்களில் தெருவுக்கு இரண்டு கிண்டர் கார்டன் பள்ளிகள் உள்ளன. அப்பள்ளி நிர்வாகிகள் ஏராளமான தொகையைக் குழந்தைகளின் பெற்றோர்களிடமிருந்து சம்பளமாக வசூலிக்கின்றனர். அவர்கள் எல்லாம் கோபிநாத், அமலோர் புனைந்துள்ள கருவிகளுக்கு ஆர்டர் கொடுத்து வாங்கித் தங்கள் பள்ளிக்கூடங்களில் சிறிதும் தயக்கமின்றிப் பயன்படுத்தலாம்.

இந்த இளைஞர்கள் ஒவ்வொரு கருவியையும் மாதிரிக்கு ஒன்றிரண்டுதான் செய்து வைத்திருக்கிறார்கள். பெருமளவில் தயாரிப்பது, கிடைக்கும் ஆதரவைப் பொறுத்திருக்கிறது. இவர்களது இந்த ஊக்கத்துக்குக் குறுக்கே நிற்காமல் ஊட்டம் அளிக்கும் வகையில், இவர்கள் பணியாற்றும் டி. வி. எஸ். லூகாஸ் ஸ்தாபனத்தினர் விளங்குவது மகிழ்ச்சி அளிக்கிறது.

—சீதா





# Links the several worlds of women

Every fortnight, Femina reaches out to over two million readers across Asia. It brings to them a discerning, balanced and urbane interpretation of the Indian woman today—and through her, of the country she has helped to change.

Policy-maker, home-keeper or ego-preserver, the Indian woman is, like her counterparts in Asia, destroying old myths and carefully defined roles. She is emerging as the force that motivates much of the change in the sub-continent.

Femina records her life, her changing values, her experiences...every fortnight in colour and black and white.

*femina*

**A FORTNIGHTLY FOR EVERY WOMAN**

A TIMES OF INDIA PUBLICATION



# சந்நிதானம்

சாதாரணமாக அமெச்சூர் நடிகர்கள் சமூக நாடகங்கள்தான் நடத்துவார்கள் - அதிக ஆடம்பரமான சீன் செட்டிங்ஸ், ஆடை ஆபரணங்கள் முதலியவை செலவில்லாமல் சுலபமாக நடத்தலாம் என்பதற்காக. ஆனால் இதற்கு மாறாக ஸ்ரீ சங்கரி தியேட்டர்ஸார் புராணக் காட்சிகள் கொண்ட இந்நாடகத்தைத் தயாரித்திருக்கின்றனர். முதல் காட்சியில் பரமசிவன், பார்வதி, நாரதர் வருகின்றனர். சிவம் பெரிதா, சக்தி பெரிதா என்ற தர்க்கம் ஏற்பட்டுப் பூவுலகில் பிறந்து இந்த விவாதத்தைத் தர்க்க ரீதியாய் நிரூபணம் செய்ய முடிவெடுக்கின்றனர்.

இந்நாடகத்தை எழுதியவர் கடலூர் டி. என். மூர்த்தி. சற்றும் புதுமையான கற்பனைதான். அதற்கு உறுதுணையாக நாடக வசனங்களைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

புராண வாடை வீசும் கதையாதலால் பரமசிவன், பார்வதி, நாரதர் ஆகிய மூவரும் இரட்டை வேடங்கள் ஏற்க நேர்ந்திருக்கிறது.

பரமசிவனாக வரும் எம். கே. மூர்த்தி, சிங்கப்பூர் முத்து என்ற பெரிய பணக்காரராகவும் வருகிறார். வேஷப் பொருத்தத்தோடு நடிப்புத் திறமையும் கணீரென்ற பேச்சும் சேர்ந்துவிடவே, பொன் மலருக்கு வாசம் ஊட்டியது போல் அவருக்குத் தனிச் சிறப்பு ஏற்பட்டு விட்டது.

நாரதராக வந்த எஸ். டி. சாம்ராஜ் நாரதருக்கேற்ற உருவம் பெற்றவர். வி. ஜே. புவனேஸ்வரி பராசக்தியாகவும், வேலைக்காரி பார்வதியாகவும் வந்து இரட்டை வேடத்தின் சிறப்பை நன்கு வெளிப்படுத்தினார்.

இந்நாடகத்தின் முக்கியமான, இன்றியமையாத பாத்திரம் பணக்காரப் பெண் உமா. விதம்விதமான உடைகளில் சொகுசாக மேடையில் அவ்வப்போது தோன்றித் தம் நல்ல நடிப்பினால் நிறைவைத் தந்தார் எஸ். ஜெய புஷ்பா. கணவனை அலட்சியப்படுத்திய கட்டங்களில் 'சபாஷ்' பெற்று விட்டார். மேடைக்கேற்ற நல்ல ஒயிலான தோற்றம்.

பட்லர் ராமு மட்டும் இல்லையென்றால், இந்த நாடகம் கொஞ்சம் 'சீரியஸ் டைப்'பாகவே இருந்திருக்கும். கூத்தபிரான் அந்தப் பாத்திரத்தை ஏற்று மேடையில் கலகலப்பை ஏற்படுத்தினார். மிகவும் இயற்கையான நடிப்பு! நாடகத்தைச் சுவையாக மேலே தொடரவும் அவர் வாய்ப்பளித்தார்.

புதுமையை எங்கு கண்டாலும் வரவேற்க வேண்டியதுதானே!

# எடுப்பார் கைப்பிள்ளை

டைப்பிஸ்ட் கோபு தம் திறமையான நடிப்பினால் நாடகத்தைச் சோர்வடையாமல் காப்பாற்றி விடுகிறார். ஆரம்பத்தில் எடுப்பார் கைப்பிள்ளையாக இருந்த போதும் சரி, இடைவேளைக்குப் பிறகு முற்றிலும் மாறுபட்ட வேடத்தில் வந்தபோதும் சரி, அவர் நடிப்பாற்றல் அவரையும் கைவிட்டு விடவில்லை; நாடகத்தையும் கைவிட்டு விடவில்லை.

தாம் கொஞ்சம்கூடச் சிரிக்காமல் பிறரைக் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைக்கும் டைப்பிஸ்ட் கோபுவினால் நம்மைக் கண் கலங்கவும் வைக்க முடிகிறதே!



கிராமத்திலிருந்து பட்டணத்துக்கு வந்த கோபு சென்னைக் கடற்கரையில் உள்ள சிலைகளைக் காணும் காட்சி, அப்பொழுது பேசும் பேச்சு நல்ல சுவை மிகுந்த கற்பனை.

டைப்பிஸ்ட் கோபுவுக்கு உறுதுணையாக இருந்து அரங்கில் ஆரவாரக் கையொலியோடு பாராட்டைப் பெறுபவர் 'என்னத்தெ' கன்னையா. பணக்கார மாமனாக வந்து சிறப்பாக நடித்தார்.

இந்த நாடகத்திலே ஒரு விசேஷம், கதாநாயகிக்கு வேலையே கிடையாது. இரண்டொரு காட்சிகளில் வந்து தலையைக் காட்டிவிட்டுக் கடைசியில் தன் மனத்துக்குப் பிடித்த அத்தானின் கைப்பிடியில் சிக்கிக்கொண்டு ஓட்டமாக ஓடுகிறாள்! கதாநாயகி அங்கமாக வருபவர் குமாரி உஷா.

கவிஞர் கப்பு ஆறுமுகம் நாடகத்தை மிகவும் லேட்டாக (வெரி வெரி லேட்டாக)ப் புனைந்து அதற்குத் தகுந்தபடி நகைச்சுவை ததும்பும் உரையாடலை எழுதியிருக்கிறார். நாடகத்தின் பரபரப்பான முடிவுக்காக ஒரு சஸ்பென்ஸோ, ஒரு த்ரில்லோ, பயங்கரக் குற்றமோ எதுவும் புனையப்படவில்லை. நாடகத்தில் 'தீம்' இல்லையென்றாலும் பாதகமில்லை; தீமை இல்லாத நாடகமாக இருந்தால் பாராட்ட வேண்டியதுதானே!

சிரிக்கச் சிரிக்கப் புனையப்பட்டிருக்கும் நாடகத்தைப் பார்த்து ரசிக்க முடிந்தால் நாடகம் வெற்றி பெற்று விட்டது என்றுதானே பொருள்?

--காந்தன்

# வீடு கட்டுகிறீர்களா?

# ஸ்டீல் டியூப் உலகில் ஏன் ITC குறிப்புள்ள டியூபுகள் நம்பக மிகுந்தவை என்பதற்கு 5 காரணங்கள் இதோ:




**1** ITC டியூபுகள் IS:1239 (பகுதி I)-1969ல் குறித்துள்ள சுவர்க்கன அளவைப் பெற்றிருக்கின்றன. இது ஒழுங்கான திருகுமறையுடன் பலமாக அழுத்தி இறுகிய இணைப்புகளை நிச்சயப்படுத்துகிறது. டியூபை நீடித்திருக்கவும் செய்கிறது.

**2** ITC டியூபுகளே 'ஹாட்' தொடர் வெல்டிங் செய்முறையில் தயாரிக்கப்படுகின்றன. இதன் விளைவாக, வெல்டுஸீம் பிளவுபடாமல் 'கோல்டு-பென்ட்' (சூடு பண்ணாமல் வளைக்கச்) செய்யலாம்.

**3** ITC டியூபுகள் 'ஹாட்' வெல்டிங் செய்முறையின் விதிப்படியான பயனால் ஒரே சீரான அழுத்தம் கொண்டுள்ளன. வெல்டிங் செய்த இடத்தில் வழக்கமான அரித்தல் மூலம் பாதிக்கப்படாது. இதுவும் டியூபுகளை நீடித்திருக்கச் செய்கிறது.

**4** ITC டியூபுகளுக்கு உள் வெல்டிங் ரிட்ஜ் (வரம்பு) கிடையாது. எனவே, நீக்கப்பட்ட சிறு பொருள் சிக்கி அடைத்துக்கொள்ளாமல் தடங்கலின்றி ஓட முடிகிறது.

**5** ITC டியூபுகளை, (டாடா பைப்ஸ் எனப் புகழ்பெற்ற) அவற்றின் மீது 1மீட்டர் இடைவெளிக்கு ஒன்றாகவிருக்கும் ITC குறி மூலம் சுலபமாக அடையாளம் கண்டுகொள்ளலாம். மீடியம் டியூபுகள்மேல் "M" குறியும் போடப்பட்டிருக்கிறது. இது இலேசான மற்றும் கனமான தரங்களிலிருந்து தனிப்பட இதனை தெரிந்து கொள்ளுவதற்கு —வாடிக்கைக் காரரின் சௌகரியத்திற்கான விசேஷ சேவை.

**டியூபுகளில் நம்பக மிகுந்த வியாபாரக்குறி**

**தி இண்டியன் டியூப் கம்பெனி லிமிடெட்**

ஒரு டாடா-ஸ்டூவர்ட்ஸ் அண்டு லாயிட்ஸ் முயற்சி

ITC-193 TAM

# திரவியம் தந்த திரவியம்



சென்னை பல்கலைக் கழகத்தின் ஆதரவில் கல்கி நினைவுச் சொற்பொழிவினை இம்முறை திரு கே. திரவியம் அவர்கள், ''தேசியம் வளர்த்த தமிழ்'' என்ற தலைப்பில் நிகழ்த்தினார். முதல் நாள் சொற்பொழிவில், தேசியம் எவ்விதம் தமிழ்க் கவிதையை வளர்த்துள்ளது என்பது முக்கிய விஷயமாக அமைந்தது. இதற்கு மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் தேசிய உணர்ச்சியூட்டும் பாடல்கள் பலவற்றை மேற்கோள் காட்டித் தொடங்கினார்.

அடுத்து நாமக்கல் கவிஞர் அவர்களைப் பற்றிப் பேசினார். வேதாரண்ய உப்பு சத்தியாக்கிரகத்தின்போது தொண்டர்களின் வழிநடைப் பாடலாக நாமக்கல் கவிஞர் யாத்துத் தந்த,

**''கத்தியின்றி ரத்தமின்றி**
**யுத்தமொன்று வருகுது''**

என்ற பாடலைப் பார்த்துவிட்டு, ராஜாஜி அவர்கள் நாமக்கல் கவிஞருக்கு, ''பாரதியார் இல்லையே என்று எனக்கிருந்த குறையை நிவர்த்தி செய்துவிட்டீர்கள்'' என்று பொருள்படத் தமது பாராட்டுதல்களைத் தெரிவித்ததை நினைவுகூர்ந்தார்.

அடுத்துச் சொற்பொழிவாளர் கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளையைக் குறிப்பிட்டார். தேசியம் வளர்த்த கவிஞர் என்று அவரைக் குறிப்பிடுவதற்கில்லை. அவர் பிரிட்டிஷ் இந்தியாவில் வாழவில்லை. திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் வாழ்ந்தவர். சமஸ்தானம் நடத்தும் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். சுதேச சமஸ்தானங்களில் வாழ்ந்தவர்கள் ஓரளவு தங்களைச் சுதந்திர பிரஜைகளாகவே நினைத்து வந்த காலம். சுதேச சமஸ்தானாதிபதி பிரிட்டிஷ் ரீஜண்ட் துரைக்குக் கட்டுப்பட்டு ஆட்சி நடத்த வேண்டியிருந்தாலும், அங்கு வாழ்ந்த மக்கள் தங்களை அந்நியர் ஆண்டதாக நினைக்கவில்லை — ஒரு சுதேச மன்னர் இருந்ததால்.

இந்நிலையிலும் பிரிட்டிஷ் இந்தியாவில் வளர்ந்து வந்த விடுதலை இயக்கம், காந்திஜியின் தலைமை, கதர் இயக்கம், ஹரிஜன ஆலயப் பிரவேசம், நம் தேசக் கொடி முதலியன கவிமணியின் உள்ளத்தைக் கிளர்ந்து பல அருமையான பாடல்களைப் பாட வைத்திருக்கின்றன.

கப்பலோட்டிய வீரத் தமிழர் வ. உ. சி., தம் சுயசரிதையைப் பாட்டாக யாத்துள்ளதைத் திரு திரவியம் மேற்கோள் காட்டி, 'இடுக்கண் வருங்கால் நகுக' என்ற வள்ளுவரின் வாக்குப்படி வ. உ. சி. வாழ்ந்து வந்த சீர்மையை எடுத்துரைத்தார்.

திரு வி. க., எஸ். டி. எஸ். யோகியார், பண்டிதை அசலாம்பிகை அம்மையார், கவியோகி சுத்தானந்த பாரதியார், ப. ஜீவானந்தம், எஸ். டி. சுந்தரம் ஆகியவர்களைத் தேச விடுதலை இயக்கம் எப்படியெல்லாம் தட்டி எழுப்பித் தமிழ் அன்னைக்குப் பாமாலைகளை அணிவிக்கச் செய்தது என்பதனை மிக அழகாக எடுத்துச் சொன்னார்.

மூன்று நாள் சொற்பொழிவில் இரண்டாம் நாள் உரையில் தேசியம் பத்திரிகை உலகத்தை எப்படி ஆட்கொண்டது, எத்தகைய பத்திரிகையாளர் உருவாயினர், எத்தகைய தமிழ் நடைகள் கையாளப்பட்டன என்பதனையும் மேடைப் பேச்சு பற்றியும் விரிவாகக் குறிப்பிட்டார். கவி சுப்பிரமணிய பாரதியார் 'சுதேசமித்திரன்' பத்திரிகையிலிருந்த போதும், தாமே 'இந்தியா' என்ற நாளிதழை நடத்தியபோதும் எப்படிப்பட்ட வன்மையும் நகைச்சுவையும் பொருந்திய தமிழ் நடையைக் கையாண்டார் என்பதனைப் பலப்பல மேற்கோள்கள் காட்டி விளக்கினார். பாரதியாரின் 'தராசு' மிக அரிய இலக்கியப் படைப்பு. அரசியலையும் மக்களின் எழுச்சியற்ற பரிதாப நிலையையும் நகைச்சுவையுடன் தராசில் பாரதியார் எடுத்துக் காட்டுவதைச் சில மேற்கோள்கள் மூலம் திரு திரவியம் விளக்கியபோது சபையில் பலத்த சிரிப்பொலி எழுந்தது. சுமார் ஐம்பதாண்டுகளுக்கு முன்பு எழுதியவை இன்றைய சூழ்நிலையிலும் உண்மையாக இருக்கின்றன. மகாகவியின் வாக்கு வேறெப்படி இருக்க முடியும்?

திரு. வி. க. அவர்கள் தாம் நடத்திய தேசபக்தனில் கையாண்ட தமிழ் நடை தனிச் சிறப்புடையது. சிறுசிறு வாக்கியங்கள். ஆயினும் தூய தமிழ் நடை. வீறு கொண்டு எழச் செய்யும் சில சமயம்; அமைதி கொள்ளச் செய்யும் சில சமயம். வேதாந்த சித்தாந்தக் கருத்துக்களும் அவர் அரசியல் கட்டுரைகளில் பின்னிப் பிணைந்து நிற்கும். திரு வி. க. வின் தமிழ்த் தொண்டு தேசியமும் சமயமும் கலந்த அரிய தொண்டு.

'தமிழ் நாடு' பத்திரிகையைத் தோற்றுவித்துத் தமிழ் நாட்டில் தேசபக்தியைச் சூறாவளியாகப் பரப்பியவர் டாக்டர் வரதராஜுலு நாயுடு. மிகத் தெளிந்த தமிழ் நடை அவருடையது. அவர் பண்ணையில் விளைந்த நற்பயிர்தான் டி. எஸ். சொக்கலிங்கம். அவர் சில காலம் ''காந்தி'' என்ற பெயரில்

வாரம் இரு முறை வெளியான காலணாப் பத்திரிகை நடத்தித் தேசத்தில் விடுதலை வெறியை ஊட்டினார். இப்படிக் காலணாப் பத்திரிகையின் மூலம் விடுதலை வேள்விக்கு ஆக்கமும் ஊக்கமும் தேடித் தந்த மற்றொருவர் 'சுதந்திரச் சங்கு' பத்திரிகையை நடத்தி வந்த சங்கு சுப்பிரமணியம் ஆவார். அவரது தமிழ் நடையும் எழுச்சியும் உணர்ச்சியும் கொண்ட நடையாகும். ஏனோ அவரைக் குறிப்பிடவில்லை சொற்பொழிவாளர்.

ஜி. சுப்பிரமணிய ஐயர் நடத்தி வந்த சுதேசமித்திரன், அந்த பத்திரிகையை நிர்வகித்து வந்த அ. ரங்கசாமி அய்யங்காரிடம் போனவுடன், சிறிது காலத்தில் சுதேசமித்திரன் தமிழ் நடை ஏராளமான வடமொழிச் சொற்களும், ஆங்கிலச் சொற்களும் கலந்த ஒரு மணிப்பிரவாளத் தமிழ் நடையாக மாறியது. இதனைக் 'கல்கி' அவர்கள் திரு வி. க.வைப் பற்றித் தாம் எழுதியிருந்த ஒரு கட்டுரையில் நையாண்டி செய்து, அந்நாளைய சுதேசமித்திரன் தலையங்கம் எப்படி யிருக்கும் என்று கற்பனையாகச் சில வரிகளை எழுதியிருந்தார். அதனைச் சொற்பொழிவாளர் திரு திரவியம் நினைவுகூர்ந்த போது, சபையினர் 'கொல்'லென்று சிரித்து விட்டனர்.

'கல்கி' அவர்கள் தமது தெளிந்த தமிழ் நடையின் மூலம் விடுதலை இயக்கத்துக்கும், இலக்கியத்துக்கும், இசைக்கும் செய்துள்ள அரிய தொண்டுகளை உணர்ச்சியோடு திரு திரவியம் நினைவுகூர்ந்தார்.

திரு வ. வே. சு. ஐயர் அவர்களின் தமிழ் நடையில் வட மொழிக் கலப்பு அதிகமாக இருந்தாலும், கருத்தாழமும், புலமையும், உணர்ச்சி வேகமும் மிகுந்திருப்பதால் அக் குறையைப் பொருட்படுத்தத் தோன்றாது என்று குறிப்பிட்டார் திரு திரவியம்.

மேடைப் பேச்சாளர்களில் திரு வ. உ. சி., சுப்பிரமணிய சிவா, வரதராஜுலு நாயுடு திரு வி. க., சத்தியமூர்த்தி, முத்துராமலிங்கத் தேவர், ராஜாஜி முதலியவர்களைப் பற்றிச் சொன்னார்.

ஒவ்வொருவருடைய பேச்சிலுமிருந்த சிறப்பு அம்சத்தைக் கூறி வருகையில் ராஜாஜியைப் பற்றிக் குறிப்பிடும்போது, திரு திரவியம் தமிழ் வசனம் படிக்கிறாரா, தமிழ்க் கவிதை படிக்கிறாரா என்ற ஐயம் அவையினருக்கு எழுந்தது. அப்படிப் பரவசமாகிப் பாராட்டுரை வழங்கினார்.

மூன்றும் நாள், தமிழகத்து நாட்டுப் பாடல்களில், நாடகங்களில், சிறுகதை — நவீனங்களில் தேசியம் எப்படிக் கொப்பளித்தது என்பதை மிக விரிவாக எடுத்துரைத்தார்.

''விண்ணுலகத்தில் கலகலப்பை உண்டாக்கிக் கொண்டிருப்பார் கொத்தமங்கலம் சுப்பு என்றே நினைக்கத் தோன்றுகிறது!'' என்று மிக உருக்கமாக அன்றைய தினச் சொற்பொழிவை ஆரம்பித்து, நாட்டுப் பாடல் பாணியில் காந்தி மகான் கதை செய்து தமிழகத்தில் லட்சோப லட்சம் மக்களை உருக்கியும், பண்படுத்தியும் வந்த அவரது அரிய சேவையை நினைவுகூர்ந்தார்.

கட்டபொம்மன் காலத்திலிருந்தே அதாவது கும்பினி ஆட்சி ஏற்பட்ட நாளிலிருந்தே, தமிழ்நாட்டுப் பாமர மக்கள் அதனை எதிர்த்து நாட்டுப் பாடல்கள் வாயிலாகக் குரல் கொடுத்திருக்கிறார்கள். கட்டப்பொம்மன், மருது சகோதரர்கள் பற்றியெல்லாம் கதைகள் நாடோடிப் பாடல்களாக வழங்கி வருகின்றன. அத்தகைய பாடல்களின் வரிசையில் கொத்தமங்கலம் சுப்பு அவர்களின் காந்தி மகான் கதையையும் சேர்த்தது சரிதானா என்று இலக்கிய நயம் உணர்ந்தவர்கள் ஐயுறக் கூடும்.

ஆங்கிலப் பேராசிரியர் கார்லைல், ஷேக்ஸ்பியருக்கு அடுத்தபடி மாபெரும் கவிஞராகத் தாம் கருதக் கூடியவர் ஸ்காட்லாந்து நாட்டுப்பாடல் முறையில் எழுதி வந்த பர்ன்ஸ் (Burns)தான் என்று குறிப்பிட்டதை இங்கு நினைவுகூர்தல் பொருந்தும்.

தேசிய இயக்கம் நாடகத் துறையிலே எவ்விதம் ஊக்குவித்தது என்பதனையும், கிருஷ்ணசாமிப் பாவலர் இயற்றிய ''கதரின் வெற்றி'' என்ற நாடகத்திலிருந்து சில பகுதிகளை வாசித்துக் காண்பித்து விளக்கினார். டி. கே. எஸ். சகோதரர்கள் அரங்கேற்றிய பல நாடகங்களிலும் தேசியம் மணத்ததையும் பொது மக்கள் ஆர்வத்தோடு அவற்றை வரவேற்றதையும் நினைவுபடுத்தினார்.

சிறுகதைத் துறையில் கல்கி, பி. எஸ். ராமையா, அகிலன், சி. சு. செல்லப்பா முதலியோரின் தேசியம் கமழும் கதைகளை நினைவுகூர்ந்தார்.

நாவல் துறையில் கா. சி. வேங்கடரமணி அவர்களின் 'தேசபக்தன் கந்தன்' என்ற நவீனத்தையும், கல்கியின் தியாக பூமியையும் கு. ராஜவேலு அவர்களின் நவீனத்தையும் குறிப்பிட்டு அவற்றின் நயங்களை விளக்கினார்.

தேசிய இயக்கத்தோடு இணைந்திருந்த மதுவிலக்கு, தீண்டாமை போன்ற அம்சங்களின் அடிப்படையில் எழுந்த இலக்கியங்களையும் சொற்பொழிவாளர் மறக்கவில்லை. ராஜாஜி எழுதிய அரிய கதைகளான திக்கற்ற பார்வதி, முகுந்தன் முதலியவற்றைச் சொற்பொழிவாளர் உதாரணங்களாக இயம்பினார்.

மூன்று நாட்களும் திரு திரவியம் அவர்கள் தமது அடுக்குச் சொல் தமிழ்நடை மூலமும் நளினமான இன்குரல் மூலமும், ஒவ்வொரு ஆசிரியரைக் குறிப்பிடும்போதும் அவர் நூலிலிருந்து மிக ரஸமான பகுதிகளை மேற்கோள் காட்டியதன் மூலமும் சபையோரைத் தம்மை மறந்த லயத்தில் ஆழ்ந்திருக்கச் செய்து விட்டார். சற்றும் அலுப்புத் தட்டவே யில்லை. மாறாக, பல்கலைக் கழகச் சொற்பொழிவு என்றாலே பயந்து ஒதுங்குகிற மரபை முறியடிப்பதாயிருந்தது.

மூன்று நாள் சொற்பொழிவுக்கும் பல்கலைக் கழகத் துணைவேந்தரே வந்திருந்து, தலைமை தாங்கி நடத்திக் கொடுத்ததானது கல்கி நினைவு அறக் கட்டளையைச் சென்னை பல்கலைக் கழகம் எவ்வளவு உயர்வாக மதிக்கிறது என்பதை எடுத்துக் காட்டியது.

திரு திரவியம் அவர்களின் சொற்பொழிவுத் தொடர் நூல் வடிவில் வந்து தமிழகமெங்குமுள்ள இலக்கிய ஆர்வமிக்க அனைவருக்கும் பயனும் சுவையும் ஊட்டட்டும்.

— எஸ். வி. எஸ்.

# நேற்றிரவு நீங்கள் கொசுக்கடியால் துன்பப்பட்டீர்களா?

# இன்றே வாங்குவீர் ரிப்லெக்ஸ் க்ரீம்
# இன்றிரவு விரட்டுவீர் கொசுக்களை!



இன்பமணம் கொண்ட ரிப்லெக்ஸ் க்ரீம் கொசுக்களை விரட்டுவதில் உன்னதமானது. முற்றிலும் தீங்கற்றது; சருமத்துக்கு எரிச்சலூட்டாது. குழந்தையின் மென்மையான சருமத்தின் மீது இதைப் பத்திரமாகத் தடவலாம்.



உங்கள் முகம், கை, கால்களின் திறந்த பகுதிகளின் மீது இரவில் ரிப்லெக்ஸ் தடவுங்கள். கொசுக்களின் தொந்தரவின்றி இரவில் நிம்மதியாகத் தூங்கலாம்.



ரிப்லெக்ஸ் க்ரீம் வெண்மையாக இருப்பதால், உங்கள் சருமத்தில் எளிதில் மறைந்து விடுகிறது. அது துணிகளின் மீது கறை உண்டு பண்ணாது; சருமத்தின் மீது எண்ணெய்ப் படிய விடாது.




## நறுமணமுள்ள
# ரிப்லெக்ஸ்
## கொசுக்களை விரட்டியடிக்கிறது

டாடா ஃபைஸன் தயாரிப்பு

TF-R-4A



பிரிட்டனில் தேர்தல்கள் முடிந்து தொழிற் கட்சி பெரும்பான்மை பலம் பெறாவிடினும் நாடாளுமன்றத்தில் அதிகமான ஸ்தானங்களைப் பெற்ற கட்சி என்ற அளவில் அமைச்சரவை அமைக்க விருக்கிறது. படத்தில் தமது பிரசித்திபெற்ற பைப்புடன் பிரசித்தி பெற்ற தலைவர் ஹரால்ட் வில்சன் தேர்தல் பிரசாரம் செய்ய வருகிறார். அவருக்கு வலது புறத்தில் ஸ்ரீமதி வில்ஸனையும் இடது புறத்தில் மற்றொரு தொழிற்கட்சிப் பிரமுகரான ஜேம்ஸ் கலாகன், தம்பதி சமேதராய் நடப்பதையும் காணலாம்.

நமது பண்பாட்டுக்கும் ஒழுக்கத்துக்கும் ஊறு ஏற்படாதவகையில் தமிழ்ப் பத்திரிகைகள் பொறுப்புணர்ச்சியுடன் வெளிவர வேண்டும் என்பதில் கருத்துக்கொண்டு இயங்குகிறது தமிழ் வாசகர் சங்கம். இதன் முதல் ஆண்டு விழா திரு நாரண துரைக்கண்ணன் தலைமையில் நடைபெற்றது. விழாவில் கவியோகி சுத்தானந்த பாரதியும், முன்னாள் முதல்வர் திரு பக்தவத்ஸலமும் குமாரி ராதா சீனிவாசனும் கலந்துகொண்டு சிறப்புரை ஆற்றினர்.






ஜனரஞ்சனியின் ஆதரவில் நடைபெற்ற குமாரி ரேவதி வேங்கடராமனின் பரத நாட்டிய நிகழ்ச்சியில் தனிச் சிறப்புடன் விளங்கியது சுத்த நிருத்தம். நட்டுவாங்கம் செய்த மாங்குடி ஆர். துரைராஜ அய்யர் இசையின் துணையை விலக்கத் தாமே மிருதங்கத்தில் சொற்கோவைகளை வாசித்தார். நடனங்களையே பிரதானமாகக் கொண்ட பைரவி வர்ணமும், காபி ராகத் தில்லானாவும், லய சுத்தத்துடன் கச்சிதமாக இருந்தன.

இரண்டாம் உலகப் போரின்போது நாட்டில் கடுமையான பெட்ரோல் நெருக்கடி இருந்த காலத்தில் டி.வி.எஸ். ஸ்தாபனம் கரி வாயுவினால் காரைச் செலுத்தலாம் என்று நிரூபித்தது. எளிய, மலிவான, ஏமாற்றமளிக்காத சாதனமொன்றை இவர்கள் கரி வாயு உற்பத்திக்குத் தயாரித்தார்கள். டி.வி.எஸ்.ஸின் பஸ்கள், லாரிகள் டாக்ஸிகள் எல்லாம் கரி வாயுவினால் வெற்றிகரமாக இயங்கின. இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின் தற்போது கடுமையான பெட்ரோல் பற்றாக்குறையும் விலை உயர்வும் தோன்றியுள்ளதால் டி.வி.எஸ். ஸ்தாபனம் மத்திய அரசின் அனுமதி கிட்டுமானால் மறுபடியும் கரி வாயு உற்பத்திச் சாதனத்தைத் தயாரித்து வழங்க முன்வந்துள்ளது.



பொன்னம்மா மகிழ்ச்சியும் வியப்பும் கலந்த முகத்தோடு குருவை நிமிர்ந்து பார்த்தாள்.

''குரு... உண்மையாகவா சொல்லுகிறாய்? எனக்குப் பாலாஜி தரிசனம் கிடைக்கவா போகிறது?''

''ஆமாம். பொன்னம்மா. தனக்கு வர லீவு கிடைக்காததால் கோபுவை அழைத்துக் கொண்டு பிரார்த்தனையைச் செலுத்தி முடி இறக்கி அனுப்பும்படி மாப்பிள்ளையிடமிருந்து எனக்குக் கடிதம் வந்திருக்கிறது. எங்களோடு நீயும் வரப்போகிறாய். நாளைக்குக் காலையில் கிளம்பப் போகிறோம்'' என்று கூறிவிட்டுப் போனார் குரு.

குரு கொடுத்துவிட்டுப் போன பிரசாதத் தோடுதிண்ணைக்கு நகர்ந்தாள் பொன்னம்மா.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு அவள் இருந்த இருப்பென்ன, இப்பொழுதிருக்கும் நிலை யென்ன?

வாசுவுக்குக் கருமம் முடிந்த கையுடனேயே பிள்ளைகள் நால்வரும் கிடைத்ததைச் சுருட்டு வதில் ஒருவனுக்கு மற்றவன் குறைந்தவன் இல்லை என்பதைக் காட்டினார்கள். அப்பாவின் நினைவாகத் தாயாரிடம் இருக்கட்டும் என்று கட்டில், பீரோ, மேஜை, நாற்காலிகள், பெரிய பெரிய நிலைக் கண்ணாடி, கைக் கடிகாரம், மெத்தை, தலையணை, போர்வை என்று எதையுமே விட்டு வைக்காது போட்டி போட்டுக் கொண்டு எடுத்து வைத்துக்கொண்டார்கள். இந்த ஜடப் பொருள்களைத் தவிர அப்பாவின் சுக துக்கங்களில் பங்கு கொண்டு; அவரோடு வாழ்ந்து, அவர்களை ஈன்று, ஊட்டி வளர்த்து, உயர்த்தி உருவாக்கிய ஓர் உயிர்ப்பொருள் கைம்பெண்ணாகி அவர்களுடைய ஆதரவை எதிர் நோக்கிய நிலையில் இருக்கிறது என்ற எண்ணம் ஒருவனுக்குக்கூடத் தோன்றவில்லை.

வாசுவின் காரியங்களெல்லாம் முடிந்து, பிள்ளைகளெல்லாம் ஊருக்குக் கிளம்ப வேண்டிய நேரம் வந்தது. பொன்னம்மாவை யார் அழைத்துக் கொண்டு போவது என்ற பேச்சுத் தொடங்கியது.

''ஜெம்ஷெட்பூரில் குளிர் காலத்தில் உடம்பு விறைத்துப் போகும். கோடை காலத்தில் மண்டை வெடித்துப் போய்விடும். அம்மாவால் அந்த அதீத சீதோஷ்ண நிலைக்குத் தாக்குப் பிடிக்க முடியாது'' என்று கழன்று கொண்டான் பெரியவன் ரமணி.

''நான் இருக்கும் இடத்தில் தலையைக் காலை வலித்தால் சட்டென்று கவனித்துக் கொள்ள டாக்டர் வசதி இருக்காது'' என்று விலகிக் கொண்டான் இரண்டாவது பிள்ளை மணி. அவன் தண்டகாரண்ய அபிவிருத்தித் திட்டத்தில் பணியாற்றி வந்தான்.

''பம்பாயில் ஐம்பது குடித்தனத்துக்கு நடுவில் இரண்டே அறைகளுக்குள் குடித்தனம் நடத்துகிறவன் நான். அம்மாவின் ஆசாரத்துக்கெல்லாம் அங்கே வசதி இருக்காது'' என்று கழற்றிக் கொண்டான் மூன்றாவது மகன் சேகர்.

கடைசிப் பிள்ளை வேணுவுக்கு என்ன காரணம் கூறுவது என்று தோன்றவில்லை. அவனுக்குத் தோன்றியவற்றை ஏற்கனவே எல்லோரும் கூறிவிட்டார்கள் போலிருக்கிறது. அவன் பேசாது விழிப்பதைக் கண்டதும், ''ஏண்டா, இவர்கள் மாதிரி உனக்கு ஒன்றும் தோன்றவில்லையா?'' என்று வேதனையோடு கேட்டுச் சிரித்த பொன்னம்மா ''அடே! பிழைக்கத் தெரியாதவனே... இவர்கள்மாதிரி ஏதாவது காரணம் கூறவில்லை யென்றால் என்னை உன் தலையில் கட்டிவிடுவார்களடா. உனக்காக நானே ஒரு காரணம் கண்டுபிடித்திருக்கிறேன். நீ இருப்பது மூன்றும் மாடிக் குடித்தனம்தானே? 'அம்மா, உன்னால் அடிக்கடி மாடிப் படி ஏறி இறங்க முடியாது' என்று கூறித் தப்பித்துக்கொள்'' என்றாள்.

தாயின் முகத்தைக்கூடப் பார்க்கத் துணிவில்லாது நான்கு பிள்ளைகளும் பார்வையைத் தாழ்த்திக் கொண்டார்கள்.

''ஏண்டா இப்படிக் கவலைப்படுகிறீர்கள்? உங்களை யெல்லாம் அப்பா சரியானபடிதான் எடை போட்டு வைத்திருந்தார். நான்தான் குருட்டுப் பாசத்தில் எதுவுமே தெரியாது பிச்சியாக இருந்தேன். யார் வருந்தி அழைத்தாலும் சரி, இந்த வீட்டை விட்டு நான் எங்கும் வரவே மாட்டேன். யாருக்கும் பாரமாக இருக்க மாட்டேன். அதோடு யாரும் எனக்குப் பைசாக்கூட அனுப்ப வேண்டாம். வாடகைப் பணம் எனக்குப் போதும். மாதத்துக்கு ஒரு கடிதம் முடிந்தால் போடுங்கள். அது போதும்'' என்று கூறிவிட்டாள் பொன்னம்மா. கூறியபடியே ஆறு மாதங்கள்வரை யார் கையையும் எதிர்பார்க்காது தனியாகக் கிராமத்தில் இருந்து காட்டினாள். அது இரத்த அழுத்தத்துக்குப் பிடிக்கவில்லை! தனியாக இருக்கிறாளே என்று துணைக்கு அது அவளைத் தேடி வந்தது. பொன்னம்மா தலை சுற்றி விழுந்து விட்டாள்.

நான்கு பிள்ளைகளுக்கும் தந்தி கொடுத்து வரவழைத்தார் குரு.

தந்தியைப் பார்த்துவிட்டு நான்கு பிள்ளைகளும் பதறிக் கொண்டு ஓடி வந்தார்கள். பொன்னம்மா இனித் தனியாக இருப்பது நல்லதல்ல என்று வைத்தியர் கூறிவிட்டார். தனியாக இருக்க முடியும் என்று அவள் எவ்வளவோ வாதாடிப் பார்த்தாள். வீட்டைக் கிரயம் பேசி விற்றுவிட்டுப் பங்கு போட்டுக் கொள்ள என்ன காரணம் கிடைக்கும் என்று தேடிக் கொண்டிருந்த பிள்ளைகள் வைத்தியர் கூறியதை வேத வாக்காக எடுத்துக் கொண்டு ஆளுக்கு ஆறு மாதங்கள் பொன்னம்மாவை வைத்துக் கொள்வது என்று முடிவு செய்தனர். பொன்னம்மாவின் அனுமதியோடு வீட்டை விற்றார்கள். பங்கு போட்டுக் கொண்டார்கள். வேறு வழியில்



லாது பொன்னம்மா பிள்ளைகளோடு வாழக் கிளம்பினாள்.

முதல் முறையாக மூத்த பிள்ளை ரமணி ஜெம்ஷெட்பூருக்கு அழைத்துக் கொண்டு போனான். ரமணியின் மனைவி பலே கெட்டிக்காரி. பொன்னம்மா இருந்த ஆறு மாதங்களில் மூன்று மாதங்கள் வரை அவளை அப்பளம் வடகம் இட வைத்துவிட்டாள்! சமையல் பக்குவ முறைகளைக் கேட்டுக்கொண்டு பத்திரிகைகளுக்கு எழுதிக் காசாக்கிக்கொண்டாள். அவளை வீட்டுக்குக் காவல் வைத்துவிட்டு, மதுரா, கங்கை, காசி, பத்ரிநாத் என்று புண்ணிய தலங்களுக்கு க்ஷேத்ராடனம் போய் வந்தாள்.

எப்படியோ ஆறு மாதங்களை அங்கே கழித்துவிட்டுக் கிளம்பினாள் பொன்னம்மா.

அண்ணனுக்கேற்ற தம்பியாகத்தான் இருந்தான் தண்டகாரண்யத்தில் இருந்த இரண்டாவது மகன் மணி. கிழிந்த புடவையோடு பங்கறைக் கோலத்தில் வந்து இறங்கிய தாயாரைக் கண்டதும், ''என்ன அநியாயம்! ஒரு நல்ல புடவையைக்கூடவா வாங்கித் தரமாட்டான் அண்ணா?'' என்று அவன் கடிந்து கொண்டதும், அன்று மாலையே மனைவியோடு கடைக்குப் போய் இரண்டு புடவைகள் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்ததும் புண்பட்டிருந்த பொன்னம்மாவின் மனத்துக்கு இதம் அளித்தது.

அதிக மன வருத்தமில்லாது ஆறு மாதங்களைக் கழித்துவிட்டுக் கிளம்பினாள் பொன்னம்மா. ரயிலுக்குக் கிளம்புகிற நேரத்தில், ஆறு மாதங்களுக்குமுன்பு அவள் ஜெம்ஷெட்பூரிலிருந்து வந்தபோது உடுத்திக் கொண்டு வந்த கிழிசல் புடவையை எடுத்துக் கொண்டு வந்த கமலி, '' நாங்கள் வாங்கிக் கொடுத்த புடவைகளை இங்கேயே வைத்துவிட்டு இதை உடுத்திக் கொண்டு போங்கள்'' என்றாள் !

திகைத்துப் போய் மகனைப் பார்த்தாள் பொன்னம்மா. ''கமலி சொல்லுவது சரிதானேம்மா? உனக்கு நாங்கள் வாங்கிக் கொடுத்த புடவைகள் இங்கேயே இருக்கட்டும். அதை யாரும் எடுக்கமாட்டோம். அடுத்த முறை இங்கு வரும்போது நீயே உடுத்திக்கலாம்'' என்று மனைவியின் கூற்றை ஆதரித்தான் மணி.

அவமானத்தால் உடல் கூசிப் போன பொன்னம்மா, ''பூமித் தாயே...! அடுத்த முறை இவர்களிடம் வரும்படி வைத்து விடாதேம்மா. அதற்குள் எனக்கு ஒரு வழி காட்டு'' என்று மனத்துக்குள் வேண்டிக்கொண்டாள்.

மூன்றாவது மகன் சேகர் பம்பாயில் இருந்தான். பொன்னம்மா அங்கு போய்ச் சேர்ந்தாள். அவனுக்கு இரு பிள்ளைகள். மூன்றாவது பெண்—கைக் குழந்தைப் பருவம். வீட்டு நிர்வாகம் வேலைகளெல்லாம் பொன்னம்மாள் பொறுப்பில் வந்தன. மூன்று ஆண்டுகள் அவள் அங்கேயே இருந்தாள்.



''அம்மா! இரண்டு வருஷங்களுக்கொரு முறைதான் என்னுடைய முறை வரவேண்டும். ஆனால் சேர்ந்தாற்போல் உன்னை மூன்று வருஷங்கள் வைத்துக் கொண்டுவிட்டேன். அதனால் இன்னும் ஆறு வருஷங்கள் பொறுத்துத்தான் நீ என்னிடம் வரவேண்டும்'' என்று வழியனுப்பினான் சேகர். தன்னுடைய சுய நலத்துக்காகத்தான் அவளை மூன்று ஆண்டுகள் வைத்துக் கொண்டோம் என்பதை அவன் மனம் எண்ணிப் பார்க்கவே யில்லை!

''ஓ'' என்று அழுது ஆற்றிக் கொள்ளக் கூட வழியில்லாது அத்தனை சுமையையும் நெஞ்சிலே தாங்கிக் கொண்டு கடைக்குட்டி வேணுவிடம் வந்தாள் பொன்னம்மா. வேணுவின் மனைவி ராதாவும் வேணு பணி புரிந்த பாங்கியில் வேலை பார்த்து வந்தாள்.

பொன்னம்மா வந்துசேர்ந்த அடுத்த நாளே ராதா வேலைக்காரிக்குச் சீட்டுக் கிழித்துவிட்டாள்! பொன்னம்மாவுக்கு இந்த வேலையெல்லாம் புதியதில்லை. இன்னும் கேட்கப் போனால் நோக்காட்டுக்காரி மாதிரி சும்மா உட்கார்ந்து கிடக்க அவளுக்கும் முடியாது. அதனால் ஓரளவு விருப்பத்துடனேயே அவள் சமையல் வேலைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டாள். ஆனால் அடுத்தபடியாக வேணுவும் ராதாவும் செய்த செயல்தான் அவளுக்குப் பொறுக்க முடியவில்லை.

சாப்பிட்டுவிட்டு பாங்குக்குக் கிளம்பும் போது துணிமணிகள் வைத்திருந்த அறை, பண்டம் பாத்திரம் வைத்திருந்த அறை, சமையல் அறையில் நெய், எண்ணெய், சர்க்கரை, காப்பிப் பொடி வைத்திருந்த பீரோ இவற்றைப் பூட்டிக் கொண்டு சென்றுவிட்டார்கள்!

மகனும் மருமகளும் தன்னை நம்பவில்லை, திருடியைப் போல் எண்ணுகிறார்கள் என்ற நினைப்பு பொன்னம்மாவின் உள்ளத்தைக் கரையானாக அரித்தது. மீண்டும் அவளுக்கு இரத்த அழுத்தம் வந்து தலை சுற்றிக் கீழே விழுந்து விட்டாள்.

''என்னை நோயாளி என்று யாரும் வைத்துச் சீராட்டவில்லையடா குரு. நான் யாருக்கும் பாரமாக இருக்கவில்லை. எல்லாரும் ஏதாவது ஒரு வகையில் என்னால் ஆதாயம் அடைந்தார்கள். ஆனால் அந்த நன்றிகூட ஒருத்தனுக்கும் இல்லை. இனி நான் அவர்களிடம் போகமாட்டேன்'' என்று கிராமத்துக்குத் திரும்பிய பொன்னம்மா, குரு வீட்டுத் திண்ணையில் குடியேறிவிட்டாள்.

பற்றற்ற சருகுபோல் ஞானியாக மாறியிருந்த பொன்னம்மாவுக்கு ஒரே ஒரு ஆசை இருந்தது. திருமலைக்குச் சென்று பெருமாளைத் தரிசிக்க வேண்டும் என்று.

குருவின் ஒரே மகள் கல்கத்தாவில் வாழ்க்கைப்பட்டு இருந்தாள். பேரன் கோபுவுக்குத் திருப்பதியில் முடியிறக்கி அனுப்பும்படி மாப்பிள்ளையிடமிருந்து கடிதம் வந்திருந்தது. தாம் கவனித்து வந்த கோயில் காரியங்களைச் செய்ய இரண்டு நாட்களுக்கு வேறு ஏற்பாடு செய்துவிட்டுப் பெண்ணையும் பேரனையும் பொன்னம்மாவையும் திருமலைக்கு அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்தார் குரு.

பாலாஜி தரிசனம் கிடைக்கப் போகிறது, தன் ஏக்கம் தீரப் போகிறது என்று மகிழ்ந்திருந்த பொன்னம்மா, ''என்ன, பொன்னம்மா? சௌக்கியமா?'' என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். பட்டணத்து வழக்கறிஞர் தர்மராஜன் தம் மனைவி ரங்கத்தோடு நின்றுகொண்டிருந்தார். ஆண்டுக்குஒருமுறை மாமனார் திதியை நடத்துவதற்காக இருவரும் கிராமத்துக்குக் காரில் வருவார்கள். ஒருவாரம் இருந்துவிட்டுப் போவார்கள்.

''பொன்னம்மா! உன் இரண்டாவது பிள்ளை மணியையும் அவன் மனைவி சுமதியையும் போன வாரம் சென்னையில் பார்த்தோம். திருப்பதியில் கல்யாணமாச்சே. அவர்கள் பெண் ராதிகாவுக்கு, -அவள் கணவனுடனும் குழந்தையுடனும் லண்டன் போகிறாளாம். மாப்பிள்ளைக்கு அங்கே ஏதோ பயிற்சியாம். திரும்பிவர எட்டு வருஷமாகுமாம்'' என்றார் வக்கீல்.

''ராதிகாவின் குழந்தையை, உன் கொள்ளுப் பேரனை நீ பார்த்ததே இல்லையே பொன்னம்மா. அந்தச் சிரிப்பு, நெற்றியின் வளைவு, கோபமாகப் பார்ப்பது எல்லாம் உன் வீட்டுக்காரர் ஜாடைதான். சின்ன வயதில் அவர் அப்படித்தான் இருந்திருக்க வேண்டும். உனக்குஆசையாக இருந்தால் எங்களோடுவா. காரில் இடம் இருக்கிறது. அடுத்த வாரம் அறுப்புக்காக வரும்போது திரும்ப அழைத்துக் கொண்டு வந்து விடுகிறோம்'' என்றாள் ரங்கம்.

''குரு. திருமலைக்கு ரிசர்வ் செய்திருக்கிறாயே..... அந்த டிக்கெட்டைத் திருப்பிக் கொடுத்தால் யாராவது வாங்கிக் கொள்ளுவார்களா?'' என்று கேட்ட பொன்னம்மாவைக் குரு திகைப்போடு பார்த்தார்.

''கொள்ளுப் பேரனோடு மணி சென்னை வந்திருக்கிறானாம். குழந்தை அப்படியே அவர் ஜாடையாக இருக்கிறானாம்.... ரங்கம் சொன்னாள். அவளோடு நானும் போகலாம் என்றிருக்கிறேன்.''

''உனக்குச் சூடு சுரணை கிடையாதா?... அவர்கள் யாராவது உன்னை அழைத்தார்களா?''

''அழைக்காவிட்டால் என்னடா?. நான் போனால் பார்க்கக் கூடாது என்று கூறிவிடுவார்களா? என்னுடைய குடும்ப விருக்ஷத்தின் கிளையில் புதிதாகக் கிளர்ந்திருக்கும் துளிர். என்னால் எப்படிடா பார்க்காதிருக்க முடியும்? அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் லண்டனுக்குப் போகின்ற அந்தக் குழந்தை, இந்தப் பங்கஜப் பொன்னம்மாவின் கொள்ளுப் பேரன் என்பதை யாராலும் அழிக்க முடியாது குரு. என்னைக் கொள்ளுப் பாட்டி என்று கூறிக் கொள்ள அவன் வெட்கப்பட்டாலும், அவனை என் கொள்ளுப் பேரன் என்று கூறி நான் பெருமைப்படுவதை யாரால் தடுக்க முடியும்? பாலாஜி திருமலையில்தான் இருப்பான். எங்கும் போய்விடமாட்டான். ஆனால் என் கொள்ளுப் பேரன் லண்டனுக்குப் போனால் திரும்பி வர எட்டு வருஷங்களாகுமே? அது வரை நான் இருப்பேனோ மாட்டேனோ? கோபித்துக் கொள்ளாதேடா குரு. அடுத்த வாரம் வந்துவிடுகிறேன்.''

புடவையை இடுக்கிக் கொண்டு போகின்ற பொன்னம்மாவையே பார்த்தார் குரு.

**ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும் ஏற்படும்போது வெட்கப்படுங்கள் அல்லது . . .**



# ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்



ஷேவிங் வேண்டாம். அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்...ரோமம் கட்டை யாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய கனிவான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டி யடிக்கலாம். மென்மையான ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர்- இந்த க்ரீமை வேண்டாத ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் மென்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது... வாரக்கணக்கில் பட்டுப்போல் மென்மை-தொட்டுப் பார்த்தால் மழமழப்பு... பெண்மையின் கனிவத்தைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ரேஸருக்கு வழியனுப்பு: ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!

## ஆன் பிரெஞ்ச்

ஹேர் ரிமூவர்




**அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும் அருமையான க்ரீம்**

2 சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffrey Manners & Co. Ltd.

126 HR 202 Tam

# ஈடிலா இன்பம் காண ஆடவருக்கு உறுதுணை




எல்லையில்லா இன்பம், எங்கெங்கும் வெற்றிகாணும் ஆடவருக்கே. அந்தப் பாக்கியசாலிகளில் நீங்களும் ஒருவராக விளங்கலாமே. உங்களுக்காகவே காத்திருக்கிறது ஆரோக்கியம்-வலிமை. வீரியம். வழிகாட்டுவது ஒகாஸா. வற்றாத இன்ப ஊற்று—அதுவல்லவா வாழ்வு! ஆடவருக்கு உண்டு ஒகாஸா. பெண்மணிக்கும் இருக்கிறது ஒகாஸா. வயது நழுவினாலும் வாழ்வு நழுவாது. தென்பை மீட்டு இன்பமூட்ட என்றுமே உண்டு நவீன டானிக் மாத்திரைகளான ஒகாஸா.

ஒகாஸா-ஹார்மோ-பார்மா லிமிடெட். லண்டன் பேர்லின் தயாரிப்பு.

எல்லா முக்கிய மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது.

OKASA CO. PVT. LTD.
P.O. BOX 396, BOMBAY-1.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# எஃகு நகரம்
# ஒரு பூஞ்சோலை நகரமாகவும் ஆக முடியுமா?

இந்தியாவின் எஃகு நகரமான ஜாம்ஷெட்பூர் ஒரு முன்மாதிரி நகரமாகத் திகழவேண்டும் என்றே திட்டமிடப்பட்டிருந்தது.

''நிழல் தரும் மரங்களைக் கொண்ட, அகன்ற தெருக்களாக அமைத்திட மறந்திட வேண்டாம். ஒன்று விட்டு ஒன்று, துரிதமாக வளர்ந்திடும் வகை மரங்களை நடவும். புல்வெளிகளுக்கும் பூங்காக்களுக்கும் போதிய வசதி செய்திடவும்.''—என்று ஜாம்ஷெட்ஜி டாடா தனது மகன் தோராப்புக்கு எழுதியிருந்தார்.

இன்று ஜாம்ஷெட்பூர் அவ்வண்ணமே உள்ளது—எஃகு நகரத்தோடு ஒரு பூஞ்சோலை நகரமாகவும் பரிமளிக்கிறது.

குடியிருப்பு வீடுகள் கூட, எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் ஜாம்ஷெட்ஜி வெளியிட்ட விருப்பங்களை நினைவில் நிறுத்தி, திட்டமிட்டு அமைக்கப் பட்டிருப்பதோடல்லாமல், இன்னும் விரிவுபடுத்தப்பட்டுக்கொண்டே இருக்கின்றன.

மரங்களின் அடர்த்தியில்
தொழிற்சாலை கண்ணுக்குப்
புலனாவதே இல்லை!



**டாடா ஸ்டீல்**



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)